

إدارة أوقاف
صالح عبدالعزيز الراجحي

# தவ்ஹீதின் எதிர்ப்புக்கு தக்க பதில்கள்

مطبعة دار طيبة . الرياض . ت: ٤٢٨٣٨٤٠

# முகவுரை

**எல்லாம் வல்ல அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் உண்டாகுக!**

**அல்லாஹ்வின் திருத்தூதர் நபிகள் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்களைப் பின் பற்றிபொழுதும் எல்லோர் மீதும் அல்லாஹ்வின் ஸலாத்தும், ஸலாமும் உண்டாவதாக!!**

அல்லாஹ்வின் அருளையும், அவன் திருப்பொருத்தத்தை யும் பெற்று சுவர்க்கம் செல்லவேண்டும் என்பதே இவ் வுலகில் உண்மையான ஒவ்வொரு முஸ்லிமின் இலட்சிய மாகும். அதை அடையவேண்டு மென்பதற்காக இரவுபக லாகப் பாடுபடுவான்; அதற்குரிய வழிமுறைகளைக் கையாள் வான்; அல்லாஹ்வைப் பயந்து நல்ல அமல்கள் செய்வதில் ஈடுபடுவான்; இந்த இலட்சியத்தை எல்லோரும் அடைந்து விடமுடியாது. தவ்ஹீத் என்னும் ஏக இறை நம்பிக்கையை தூய்மையாக யார் உறுதிகொண்டு அல்லாஹ் ஒருவனை மட்டும் களங்கமற வணங்குகிறார்களோ அவர்களைத்தவிர வேறு யாரும் சுவர்க்கம் செல்ல முடியாது. ஷிர்க்கான செயல்களைப் புரியக்கூடியவர்கள் மீது அல்லாஹ் சுவர்க் கத்தை ஹராமாக்கி விட்டான். ஒரு கடுகளவு ஷிர்க்கான செயலை யார் செய்தாலும் அவர்களும் கண்டிப்பாக சுவர்க்கம் செல்லமுடியாது என அல்லாஹ் தன் பரிசுத்தக் குர்ஆனில் கூறி தெளிவுபடுத்தி விட்டான். ஷிர்க்கான செயல்கள் புரிகின்றவர்கள் எவ்வளவு நல்லமல்கள் செய்தாலும் அவை களில் எதையும் அல்லாஹ் ஏற்றுக்கொள்வதில்லை. அவை அனைத்தையும் வீணாக்கி விடுகின்றான் என்றும் கூறி யுள்ளான்.

அவ்வாறாயின் ஷிர்க்கான விஷயங்களில் முஸ்லிம்கள் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்பதை

அறியக் கடமைப்பட்டுள்ளார்கள். ஷிர்க் என்றால் என்ன வென்று அறியாமல் அதைத் துச்சமாகக் கருதிவிடுகின்ற வர்களின் இறுதி மோசமானதாகத்தான் அமையும். ஷிர்க் என்றால் என்ன? என்று அறியும்போதுதான் அதைவிட்டும் தம்மைப் பாதுகாத்து, தமது கொள்கையைத் தூய்மைப் படுத்த முடியும். இதைப் பெரும்பாலான முஸ்லீம்கள் தெரிந்துகொள்ளாததாலும், ஷைத்தானின் சதியில் சிக்கிக் கொண்டதாலும் இதை அறிந்து கொள்ள முடியாமல் தவ்ஹீதில் தவறான பல சந்தேகங்களைக் கிளப்பிவிடு கின்றனர். இந்த சந்தேகங்களுக்கு தக்க பதில்களை இமாம் முஹம்மது பின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் தருகின்றார்கள். ஒவ்வொரு முஸ்லீமும் தன் கொள்கையை சீர்படுத்தி சுவர்க்கத்திற்கு அருகதையானவனாக தன்னை ஆக்கிக் கொள்ளவேண்டும் என்ற நன்நோக்குடனும், முஸ்லீம்கள் அனைவரும் தன் சகோதரர்கள்; அவர்களுக்கு இதை விளக்கிக் கொடுக்கவேண்டுமென்ற கடமை உணர்வோடும் தான் இப்புத்தகத்தை வரைந்துள்ளார்கள்

உண்மையை உணர்ந்து தூய்மையான ஏக இறை நம்பிக்கையுடையவர்களாக ஆகவேண்டுமென்ற ஆவலோடு இப்புத்தகத்தை ஆரம்பமுதல் கடைசிவரை படியுங்கள். புத்தகத்திலுள்ள விஷயங்களைச் சொல்வது யார் என்பதைக் கவனியாமல் அதில் உள்ளவைகள் சரிதானா. ஆதாரத்தின் அடிப்படையில் கூறப்பட்டவைதானா என்பதையே கவனிக்கவேண்டும். குர்ஆன், ஹதீஸ் ஆதாரமின்றி செய்யப் படும் எந்த அமலையும் அல்லாஹ் ஏற்றுக்கொள்வதில்லை.

மன்னிக்கப்படாத பெரும் பாவமான ஷிர்க்கான சொல், செயல்களை விட்டும் அல்லாஹ் நம் அனைவரையும் காப்பாற்றி உண்மையான ஏக இறை நம்பிக்கை உடையவர்களாக நம்மை ஆக்கியருள்வானாக! ஆமீன்.

1—8—83
மதீனத்துல் முனவ்வரா

S. கமாலுத்தீன்

بسم الله الرحمن الرحيم

வணக்க வழிபாடுகள் எல்லாவற்றையும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் செய்து வணக்கத்தால் அவனை ஒருமைப் படுத்துவதே "தவ்ஹீத்" என்னும் ஏக இறை நம்பிக்கையாகும். மானிட சமூகத்திற்கு அல்லாஹ் அனுப்பிய ஒவ்வொரு தூதரும் மக்களுக்கு போதித்துக் காண்பித்த மார்க்கமும் இதுவேயாகும். இவ்விறைத்தூதர்களில் முதல்வர் நபி நூஹ் (அலை) அவர்களாவார்கள். வாழ்ந்து மடிந்த நல்லோர்களான வத்து, சுவாவு, எகூஸீ, எஊக், நச்ர் போன்றவர்களை அக்கால மக்கள் வரம்புமீறி நேசித்து அல்லாஹ்விற்கு இணை வைத்தபோது, இம்மக்களுக்கு நேர் வழி காண்பிப்பதற்காக அல்லாஹ் நபி நூஹ் (அலை) அவர்களைத் தன் தூதராக அனுப்பினான்.

இறைத் தூதர்களாக உலகிற்கு வந்தவர்களில் முஹம்மது (ஸல்) அவர்கள் இறுதியானவர்களாகும். இவர்கள் அன்று மக்காவில் வணங்கப்பட்டு வந்த நல்லோர்களுடைய உருவச்சிலைகளையெல்லாம் உடைத்தார்கள்.

வணங்கி, ஹஜ் செய்து, தான தர்மம் வழங்கி, அல்லாஹ்வை அதிகம் நினைத்து ஞாபகம் செய்து வந்த மக்கள் மத்தியில்தான் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டார்கள். அம்மக்கள் படைப்

பினங்களில் சிலவற்றை தங்களுக்கும், அல்லாஹ்விற்கும் இடையில் தரகர்களாகவும், நடுவர்களாகவும் ஆக்கிக் கொண்டார்கள். மலக்குகளும், நபி ஈசா (அலை) அவர்களும், மரியம் (அலை) அவர்களும் ஏனைய நல்லடியார்கள் எல்லாம் எங்களை இறைவன்பால் அடுத்து வைத்து எங்களுக்காக அவனிடம் இவர்கள் பரிந்து பேசுவதை நாங்கள் விரும்புகிறோம் எனக் கூறினார்கள்.

இது போன்ற கொள்கையுடைய மக்களுக்கு நேர்வழி காட்டவே அல்லாஹ் பெருமானார் (ஸல்) அவர்களைத் தன் தூதராக அனுப்பினான். இவர்கள் நபி இப்ருஹீம் (அலை) அவர்கள் போதித்த இஸ்லாமிய மார்க்கத்தை புதுப்பித்தார்கள். அம்மக்கள் நம்பிவந்த கொள்கைளும், இறந்தவர்கள் மூலம் இறைவன்பால் நெருங்க விரும்புவதெல்லாம் வணக்க வழிபாடுகளாகும். இவ்வணக்கங்கள் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே செய்ய வேண்டும் என்றும் அல்லாஹ்வோடு நெருங்கிய மலக்காயினும் சரி, அவனுடைய தூதராயினும் சரி, அல்லது இவர்கள் அல்லாத எந்த படைப்புகளாகுலும் சரி அவர்கள் வணக்க வழிபாடுகளில் எதுவும் செலுத்தப் படுவதற்கு தகுதியற்றவர்களாவார்கள் என்றும் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ் ஒருவன் மட்டுமே அகிலங்கள் அனைத்தையும் படைக்கக் கூடியவன், அவனே உணவளிப்பவன், அவன் இணையற்றவன், அவனைத்தவிர உணவளிப்பவன் வேறுயாருமில்லை. அவனைத் தவிர உயிர்ப்பிப்பவனும், மரணிக்கச் செய்பவனும் யாருமில்லை. அவன்தான் காரியங்கள் அனைத்தையும் பரிபாலிப்பவன், வானங்களும், பூமிகளும் அதிலுள்ளவைகள் அனைத்தும் அல்லாஹ்வின் ஆதிக்கத்தின் கீழ் உள்ள அவனுடைய அடிமைகளாகும் என்றெல்லாம் அன்று மக்காவில் வாழ்ந்த முஷ்ரிகீன்கள் (பலதெய்வக் கொள்கையுடையவர்கள்) நம்பி உறுதி கொண்டிருந்தார்கள்.

பெருமானார் (ஸல்) அவர்கள் எந்த மக்களை எதிர்த்துப் போராடினார்களோ அம்மக்கள் இவ்வாறே நம்பியிருந்தார்கள் என்பதற்கு ஆதாரம் என்ன? என்று கேட்கக் கூடியவர்களுக்கு கீழ் காணும் இறை வசனங்கள் சான்று பகர்கின்றன.

அல்லாஹ் கூறுகின்றான் :

''(நபியே!) நீர் அவர்களை நோக்கி வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உங்களுக்கு ஆகாரமளிப்பவன் யார்? (உங்களுடைய) கேள்விக்கும், பார்வைக்கும் உரிமையாளன் யார்? இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்? (உலகின் சகல) காரியங்களையும் திட்டமிட்டு நிகழ்த்துபவன் யார்? என்று கேட்பீரானால் அதற்கு அவர்கள் ''அல்லாஹ்'' தான் என்று கூறுவார்கள். அவ்வாறாயின் நீங்கள் அவனுக்குப் பயந்து வழிபட வேண்டாமா? என்று (முஹம்மதே!) நீர் கேளும். (10:31)

மற்றுமோர் வசனத்தில் கூறுகிறான் :

''(நபியே! நீர் அவர்களை நோக்கி) பூமியும், அதிலுள்ளவைகளும் யாருடையன என நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள் எனக் கேட்டால், அதற்கவர்கள் ''அல்லாஹ்வுக்குடையனவே'' எனக் கூறுவார்கள் (அவ்வாறாயின்) இதன் மூலம் நீங்கள் நல்லுணர்ச்சி பெறவேண்டாமா? என்று கூறும், (அன்றி) ஏழுவானங்களுக்கு இறைவனும், மகத்தான அர்ஷுக்கு இறைவனும் யார்? எனக் கேட்பீராக! அதற்கவர்கள் (யாவும்) அல்லாஹ்வுக்குடையனவே என்று கூறுவார்கள். (அவ்வாறாயின்) நீங்கள் அவனுக்குப் பயப்பட வேண்டாமா? என்று கூறும், அன்றி சகல பொருள்களின் அதிகாரம் யார் கையில் இருக்கிறது? யாராலும் இரட்சிக்கப்படாதவனும், (எல்லோரையும்) இரட்சிக்கக்கூடியவனும் யார்? நீங்கள் அறிந்திருந்தால் கூறுங்கள் எனக் கூறும், அதற்கவர்கள்

"சகல அதிகாரமும் அல்லாஹ்வுக்குடையதுதான்" என்று கூறுவார்கள், அவ்வாறாயின் நீங்கள் உங்கள் அறிவை எங்கு இழந்து விட்டீர்கள்? என்று கூறும்" (23 : 84, 89)

இவ்வாறு அம்மக்கள் உறுதி கொண்டிருந்தும் கூட பெருமானார் (ஸல்) அவர்கள் அழைப்புக் கொடுத்த "தவ்ஹீத்" என்னும் ஏக தெய்வக்கொள்கையில் சேர்ந்தவர்களாக அவர்கள் கருதப்படவில்லை, காரணம் அவர்கள் "தவ்ஹீதுல் இபாதத்" என்னும் அல்லாஹ்விற்கு மட்டும் வணக்க வழிபாடுகளைச் செய்து, வணக்கத்தால் அவனை ஒருமைப்படுத்த வேண்டும், என்ற தவ்ஹீதை மறுத்ததேயாகும். இந்த தவ்ஹீதைத்தான் ஷிர்க்கான காரியங்களைச் செய்து வருகின்ற இன்றைய முஸ்லிம்கள் 'இஃதிகாது†' அதாவது கொள்கை நம்பிக்கை என்று கூறுகின்றனர்.

அக்கால முஷ்ரிகீன்கள் அல்லாஹ்வை இரவு பகலாக அழைத்து வந்தார்கள். அத்துடன் தங்கள் நலனுக்காகவும், இறைவன்பால் அணுக தங்களுக்குப் பரிந்து பேசுவதற்காகவும், சிலர்கள் மலக்குகளை அழைத்து உதவி தேடினார்கள். மேலும் "லாத்" போன்ற நல்லோர்களையும், நபி ஈசா (அலை) அவர்களையும் அழைத்து உதவி தேடினார்கள்.

இச்செயல்களெல்லாம் அல்லாஹ்விற்கு இணைவைப்பதாகும் என்பதற்காகவே அம்மக்களோடு பெருமானார் (ஸல்) அவர்கள் போராடினார்கள். வணக்க வகைகள் எல்லாவற்றையும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே செய்யவேண்டும் என்று

---

† ஒன்றை மனதால் நம்பி உறுதி கொள்வதற்கு "இஃதிகாத்" என்று கூறப்படும். "தவ்ஹீதுல் இபாதத்" என்பது நம்பிக்கையல்ல, மாறாக வணக்கங்கள் அனைத்தையும் அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் செய்வதாகும்.

கூறி மக்களை அழைத்தார்கள். அல்லாஹ் தன் திருமறையில் கூறுவதாவது :

> "நிச்சயமாக மஸ்ஜிதுகளெல்லாம் (அல்லாஹ்வின் வணக்கத்திற்காகவே) உள்ளன. ஆகவே (அவைகளில்) அல்லாஹ்வுடன் மற்றெவரையும் பெயர் கூறி அழைக்காதீர்கள்". (72 : 18)

மேலும் கூறுகிறான் :

> (நாம் பிரார்த்தனை செய்து) அழைக்கத் தகுதியுடையோன் அல்லாஹ் ஒருவனே. எவர்கள் அவனையன்றி மற்றவர்களை (உதவிக்காக) அழைக்கின்றார்களோ அவர்களுக்கு அவைகள் யாதொரு விடையும் அளிக்காது. (13 : 14)

அல்லாஹ் ஒருவனையே அழைத்து உதவி தேட வேண்டும். அவன் ஒருவனுக்கே நேர்ச்சை செய்யவேண்டும். அவன் ஒருவனுக்கே அறுத்துப் பலியிட வேண்டும். அவன் ஒருவனிடமே அபயம் தேடவேண்டும். வணக்க வழிபாடுகள் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே செய்யவேண்டும். இவைகளில் எதுவும் அவனல்லாதாருக்குச் செலுத்தப் படுவது கூடாது என்று அன்றைய மக்களுக்குப் பெருமானார் (ஸல்) அவர்கள் போதித்தபோதுதான் அம்மக்களுக்கும், பெருமானார் (ஸல்) அவர்களுக்குமிடையில் போர் மூண்டது. அம்மக்கள், இறைவன் ஒருவன்; அவன்தான் படைப்பவன்; அவன்தான் உணவளிப்பவன் என்ற அல்லாஹ்வுடைய பரிபாலனப் பண்புகளைக்கொண்டு அவனை ஒருமைப்படுத்தியதனால் மட்டும் இஸ்லாத்தில் சேர்ந்தவர்களாக அவர்கள் கருதப்படவில்லை.

மலக்குகள், நபிமார்கள், அவுலியாக்கள் இவர்களை யெல்லாம் அழைத்து, அவர்களுடைய பரிந்துரைத்தலையும், அவர்கள் மூலம் அல்லாஹ்வின்பால் நெருங்குவதையும் நாடினார்கள். இச்செயல்கள்தான் அவர்களோடு போராடி அவர்களுடைய பொருட்களை அபகரிப்பதை ஆகுமாக்கக் காரணமாக அமைந்தது.

மேற்கூறப்பட்ட உண்மைகளை அறியும்போது தவ்ஹீது என்னும் ஏக தெய்வக் கொள்கையின்பால் முஷ்ரிகீன்களை ரசூல்மார்கள் அழைத்தபோது அதை அவர்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தார்களே அந்த தவ்ஹீது எது என்பதை நம்மால் அறிந்துகொள்ள முடியும்.

இந்த தவ்ஹீது தான் நாம் கூறும் "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்னும் திருக்கலிமாவின் பொருளாகும். "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்ற கலிமாவில் உள்ள "இலாஹ்" என்ற சொல்லிற்கு "இறைவனிடத்தில் தங்களுக்காகப் பரிந்து பேசுபவர், கஷ்ட—துன்ப நேரங்களில் அழைக்கப்படுபவர் என்பதுதான் பொருள்" என அன்றைய முஷ்ரிகீன்கள் (பல தெய்வக் கொள்கைக்காரர்கள்) நம்பி வந்தார்கள். இவ்வாறு நம்பி அழைக்கப்படுவது மலக்காகவோ, நபியாகவோ அல்லது மரமாகவோ, கப்ருகவோ இருப்பினும் சரியே.

"இலாஹ்" என்பதற்குப் படைப்பவன், உணவளிப்பவன், பரிபாலிப்பவன் என்று பொருள் என அம்மக்கள் கருதவில்லை ஏனெனில் அல்லாஹ் ஒருவன் மட்டும்தான் படைப்பவன்; அவனே உணவளிப்பவன்; பரிபாலிப்பவன் என்று அவர்கள் நம்பியிருந்தார்கள். இதை அறிவிக்கின்ற பல இறை வசனங்கள் முன்னர் கொடுக்கப்பட்டுள்ளன.

இக்காலத்தில் ஷிர்க்கான செயல்களைச் செய்துவருகின்றவர்கள் எவ்வாறு சில போலி ஷேக்மார்களைத் தங்கள் ஷேக் என்றும், தலைவர் என்றும் கூறி அவர்களுக்குக் கராமத் இருக்கிறது; அவர்கள் அல்லாஹ்விடத்தில் பரிந்து பேசுவார்கள் என்றும் நம்பி வருகிறார்களோ அதைப்போன்று தான் அக்கால பல தெய்வக் கொள்கைக்காரர்களும் "இலாஹ்" என்ற சொல்லிற்குப் பொருள் கொடுத்து வந்தார்கள்.

இம்மூட நம்பிக்கையில் இருந்து வந்த மக்களை ஏக தெய்வக் கலிமாவான "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்னும்

திருக்கலிமாவின்பால் அழைப்பதற்காகவே பெருமானார் (ஸல்) அவர்கள் அனுப்பப்பட்டார்கள். இக்கலிமாவின் நோக்கம் அதை நாவால் மொழிவது மட்டுமல்ல, மாறாக வணக்கத்தால் அல்லாஹ்வை ஒருமைப்படுத்தி, அவன் ஒருவனிடமே நம் அனைத்துக் காரியங்களையும், தேவைகளையும் கோரவேண்டும். அவனல்லாமல் உலகில் வணங்கப்படுகின்ற அனைத்துப்படைப்பினங்களையும் மறந்து அவைகளை விட்டும் ஒதுங்கி விலகிக்கொள்ள வேண்டும் என்பதைத் தான் பெருமானார் (ஸல்) அவர்கள் இக்கலிமாவின் மூலம் விரும்புகிறார்கள் என்பதை அக்கால பல தெய்வக் கொள்கைக்காரர்கள் நன்கு அறிந்திருந்தார்கள். (நாவால் மொழிவதை மட்டும்தான் பெருமானார் (ஸல்) அவர்கள் விரும்பினார்கள் என்று அவர்கள் கருதியிருப்பார்களானால் அக்கலிமாவை ஒருமுறையல்ல பல முறை கூறியிருப்பார்கள்.) எனவேதான் பெருமானார் (ஸல்) அவர்கள் அம்மக்களிடம் "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று கூறுங்கள் என வேண்டியபோது பின்வரும் கேள்வியை கேட்டார்கள்,

> "முஹம்மத் (நம்) தெய்வங்கள் யாவையும் (நிராகரித்து விட்டு [வணக்கத்திற்குரியவன்] ஒரே ஆண்டவன்தான் என்று ஆக்கிவிட்டாரா? என்று. நிச்சயமாக இது மிக ஆச்சரியமான ஒன்றாகவே இருக்கிறது. (38 : 5)

இத்திருக் கலிமாவின் மூலம் பெருமானார் (ஸல்) அவர்கள் எதை விரும்புகிறார்கள் என்பதை அக்கால பல தெய்வக் கொள்கைகாரர்கள் நன்கு அறிந்திருக்கும்போது, இக்காலத்தில் தங்களை முஸ்லிம்கள் எனக்கூறிப் பெருமையடிக்கின்றவர்கள் அக்கலிமாவின் பொருளுணராமலிருப்பது மிக ஆச்சரியமாகவே இருக்கிறது.

அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் படைப்பதில்லை, உணவளிப்பதில்லை என நம்புவது மட்டும்தான் அக்கலிமாவின் பொருளாகுமென, அறிவாளிகளெனத் தங்களை பிதற்றிக்கொள்ளும் சிலர் கூறுகின்றனர். இவர்களைக்

காட்டிலும் காபிர்கள் இக்கலிமாவிற்கு அதிக விளக்கம் தெரிந்திருக்கின்றனர் என்பதை நினைத்துப் பார்க்கும்போது, இக்கலிமாவின் உண்மைப் பொருளுணராத முஸ்லிம்களிடத்தில் என்ன நலனிருக்க முடியும்?

மேற்கூறப்பட்டவைகளை உளப்பூர்வமாக நன்கறிந்த பின்

"நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணைவைப்பதை ஒருபோதும் மன்னிக்க மாட்டான், இதனை அல்லாத குற்றத்தை தான் விரும்பியவர்களுக்கு மன்னிப்பான்"

என்ற இறை வசனத்தில் கூறப்பட்டுள்ள "ஷிர்க்" என்னும் அல்லாஹ்விற்கு இணைவைத்தலையும், இறைத்தூதர்களாக உலகிற்கு வந்த எல்லா இறைத்தூதர்களும் அழைப்புக் கொடுத்த, அல்லாஹ்விடத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரே மார்க்கமான இஸ்லாமிய மார்க்கத்தையும் நன்கறிந்து இம் மார்க்கத்தைத் தவிர வேறு எந்த மார்க்கத்தையும், எந்த கொள்கையையும் அல்லாஹ் ஏற்றுக்கொள்வதில்லை என்பதையும் தெரிந்துவிட்டோமானால், இக்காலத்தில் வாழும் முஸ்லிம்களில் பெரும்பாலானவர்கள் இது பற்றிய போதிய அறிவற்றவர்களாக இருக்கிறார்கள் என்பதை அவர்கள் செயல்கள் மூலம் நம்மால் உணர முடியும். இவ்வாறு உணரும்போது இருவிதமான பலன்களை அடையலாம்.

1. ஈமான் என்னும் அல்லாஹ்வின் அருட்கொடை அவனது கருணை முதலியவை நமக்கு கிடைப்பதால் மகிழ்வடைவது, இது பற்றி அல்லாஹ் கூறுகிறான்:

"ஈமானை அல்லாஹ்வின் அருளாகவும், அவனுடைய கருணையாகவும் பாவித்து, இதற்காக அவர்கள் சந்தோஷமடையட்டும், இது அவர்கள் சேகரித்து வைத்திருக்கும் மற்ற பொருள்கள் யாவையும்விட மிக மேலானது என்றும் நபியே நீர் கூறுவீராக!" (10;58)

2. நம்மிடமிருந்து ஷிர்க்கான செயல்கள் நிகழ்ந்து விடுமோ என்ற பயங்கரமான பயம் ஏற்படுகிறது.

அதாவது ஒருவன் தன் நாவிலிருந்து வெளிப்படுத்தும் குப்ருன ஒரு வார்த்தையினுல் காபிருகிவிடுகின்ருன் என்பதை நாம் அறிய வேண்டும். சிலவேளை அறியாமையினுல் அவ்வார்த்தையைக் கூறிவிடுகின்ருன். அவன் அறியாமையை ஒரு காரணமாகக் கூறிவிட முடியாது. பலதெய்வக் கொள்கையுடையோர் கருதியதுபோன்று குப்ருன வார்த்தை இறைவன் பக்கம் அடுத்து வைக்கிறதென நினைத்து அவ் வார்த்தையை சிலர் சிலவேளை கூறிவிடுகின்றனர். இதை நாம் அறியும்போது குப்ருன வார்த்தை நம் நாவிலிருந்து வெளியாவதை அஞ்சுகின்ருேம்.

குறிப்பாக அல்லாஹ் இதுபற்றிய சில சம்பவங்களைக் குர்ஆனில் கூறுகின்ருன். அச்சம்பவங்களை நாம் சிந்தித்து ஆராயும்போது அவைகளிலிருந்து நம்மை காப்பாற்றிக் கொள்வதற்கு அது ஏதுவாக அமைகிறது உதாரணமாக நபி மூஸா (அலை) அவர்களும் அவர்களைப் பின்பற்றியவர்களும் பிர்அவ்னுடைய தாக்குதலில் சிக்காமல் கடலைத் தாண்டி வரும் வழியில் சில சிலைகளை மூஸாவின் தோழர்கள் பார்த்த போது, மூஸாவே! இதைப்போன்று எங்களுக்கும் ஒரு தெய்வத்தை செய்துதாரும் எனக்கேட்டார்கள். இவ்வாறு கேட்டவர்கள் மிக அறிவுடையவர்களாகவும், நல்லவர்களாகவுமே இருந்தார்கள். அவ்வாறிருந்தும், தகாத இந்த கேள்வியை நபி மூஸாவிடம் கேட்டார்கள். அதற்காக அல்லாஹ் அவர்களைப் பழித்துக் கூறினுன். இச்சம்பவத்தை அல்லாஹ் நமக்கு குர்ஆன் மூலம் அறிவித்துள்ளான். இதை நாம் அறியும்போது இதுபோன்ற சம்பவங்களிலிருந்து நம்மை நாம் காப்பாற்றிக் கொள்கின்ருேம்

தவ்ஹீதை மக்களுக்குப் போதிக்கின்ற நபிமார்களை அல்லாஹ் உலகிற்கு அனுப்பும்போது அவர்களுக்குச் சில எதிரிகளையும் ஆக்கிவிடுவது அல்லாஹ்வின் சூட்சுமமாக

இருக்கிறது. இதைப்பற்றி அல்லாஹ் தன் திருமறையில் கூறும்போது :

"இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும் மனிதரிலும், ஜின்னிலுமுள்ள ஷைத்தான்களை நாம் விரோதிகளாக்கியிருந்தோம். அவர்களில் சிலர் சிலரை ஏமாற்றும் பொருட்டு, அலங்காரமான பொய்க் கூற்றுக்களை இரகசியமாகக் கூறிக் கலைந்துக் கொண்டிருந்தார்கள்". (6:112)

தவ்ஹீதின் எதிரிகளிடத்தில் சிலவேளை பல அறிவாற்றல்களும், ஆதாரங்களும் அதற்குரிய புத்தகங்களும் இருக்கும். இதைக்குறித்து அல்லாஹ் கூறுவதாவது :

"அவர்களிடம் (அல்லாஹ்வுடைய தூதர்கள் அத்தாட்சிகளில்) தெளிவானவற்றைக் கொண்டுவந்த சமயத்தில் (அதனை அவர்கள் பரிகாசம் பண்ணி, நிராகரித்து விட்டு இவ்வுலக வாழ்க்கை சம்பந்தமான) தங்களிடமுள்ள கல்விகளைப்பற்றி பெருமகிழ்ச்சியடைந்தார்கள்." (40:83)

அல்லாஹ்வின் பாதையில் செயல்படுகின்றவர்களுக்கு கண்டிப்பாக எதிரிகள் இருக்கின்றார்கள். இவர்கள் அறிவாற்றலும் நாவன்மையுடையவர்களாகவும் இருப்பார்கள் என்பதை அறியும்போது, அவ்வெதிரிகளை எதிர்த்துப் போராடுவதற்குத் தேவையான மார்க்க அறிவென்னும் ஆயுதத்தைத் தயாரித்துக் கொள்வது கட்டாயக் கடமையாகும். இவ்வெதிரிகளின் தலைவனான "இப்லீஸ்" கீழ்க் கண்டவாறு ஆண்டவனிடம் சவால் விட்டிருக்கிறான் :

"(ஆதமுடைய சந்ததிகளாகிய) அவர்கள் உன்னுடைய நேரான வழியில் செல்லாது (தடைசெய்ய வழிமறித்து அதில்) உட்கார்ந்துகொள்வேன். நிச்சயமாக, அவர்களுக்கு முன்னும், பின்னும், அவர்களின் வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் அவர்களிடம் வந்து (அவர்களை வழி கெடுத்துச்) கொண்டே இருப்பேன். அவர்களில்

அதிகமானவர்களை நன்றியுடையவர்களாக நீ பெற மாட்டாய்" - (7 : 16)

"இப்லீஸ்" என்பவன் அல்லாஹ்விடத்தில் இவ்வாறு கூறியிருப்பினும், அல்லாஹ்வின்பால் எதிர் நோக்கிச் சென்று அவனுடைய ஆதாரங்களையும், அத்தாட்சிகளையும் செவி மடுப்பவர்கள் வேறு யாருக்கும் அஞ்ச வேண்டியதில்லை. ஏனெனில்,

"நிச்சயமாக ஷைத்தானுடைய சூட்சி மிகவும் பலவீன மானதாகும்." (4 : 76)

என்று அல்லாஹ் கூறியுள்ளான்.

தவ்ஹீதில் நம்பிக்கையுடைய சாதாரண ஒரு பாமரன், ஷிர்க்கான செயல்களைப் புரிந்துவரும் ஆயிரம் அறிஞர்களை மிஞ்சி விடுவான், இதைக் குறித்து அல்லாஹ் கூறுவதாவது:

"நிச்சயமாக நம்முடைய படையினரான விசுவாசிகளே வெற்றிபெறுவார்கள்" (37 : 173)

அல்லாஹ்வின் பட்டாளம் என்னும் முவஹ்ஹிதீன்கள் எவ்வாறு நாவாலும், ஆதாரங்களாலும் தங்கள் எதிரிகளை மிஞ்சுகின்றார்களோ அவ்வாறே ஆயுதப் போரிலும் அவர்களை மிஞ்சுபவர்களாக இருக்கின்றார்கள். தன்னுடன் தகுந்த ஆயுதமின்றி எதிரிகளை சந்திக்கின்ற ஏக தெய்வக்கொள்கையுடையவனைப் பற்றித்தான் மிக அஞ்சவேண்டியிருக்கிறது. ஏனெனில் எதிரி ஒருவேளை தன்னுடனுள்ள போலி ஆயுதங்களால் தாக்கிவிடக் கூடும்.

அல்லாஹ் அவனது திருக்குர்ஆனை இறக்கித்தந்து நம்மீது அருள்புரிந்துள்ளான். இத்திருமறையை

"ஒவ்வொரு விஷயத்தையும் தெள்ளத் தெளிவாக விளக்கக் கூடிய வேதமாகவும், நேர்வழி காண்பிக்கக் கூடியதாகவும், அருட்கொடையாகவும், முஸ்லிம்களுக்கு சுபசோபனம் கூறக்கூடியதாகவும்" (16 : 89)

ஆக்கியிருக்கின்றான், எனவே தவறான கொள்கையுடையவன் ஒரு ஆதாரத்தைக் கொண்டு வருவானாயின் அதை முறியடித்து அதன் தவறை விளக்குகின்ற தகுந்த ஆதாரங்கள் குர்ஆனில் இருக்கவே செய்கிறது, எனவே அல்லாஹ் கூறுகின்றான்:

> "(இந்நிராகரிப்போர் எத்தகைய கேள்வியும் கேட்டு, அதற்காக) எந்த உதாரணத்தை உம்மிடம் அவர்கள் கொண்டுவந்த போதிலும் (அதைவிட) உண்மையான விஷயத்தையும், அழகான வியாக்கியானத்தையும் நாம் உமக்கு அருளியே இருக்கின்றோம்" (25 : 33)

தவறான கொள்கையுடையவர்கள் இறுதிநாள் வரை தங்களுக்கு சாதகமாகக் கொண்டு வருகின்ற ஒவ்வொரு ஆதாரத்திற்கும் சரியான பதிலை அல்லாஹ் தன் திருமறையில் கூறியே இருக்கின்றான், என்பதை மேற்கூறப்பட்ட திருவசனம் விளக்குகிறதென சில குர்ஆன் விரிவுரையாளர்கள் கூறியுள்ளனர்.

இக்காலத்தில் ஷிர்க்கான காரியங்களை செய்கின்றவர்கள் தங்களுடைய தவறான கொள்கைகளுக்குக் கூறும் ஒவ்வொரு ஆதாரத்திற்கும் அல்லாஹ் தன் பரிசுத்தக் குர்ஆனில் பதில் கூறுகின்றான், அதில் சிலவற்றை இங்கு குறிப்பிடுகின்றேன்.

தவறான கொள்கையுடையவர்களின் கேள்விகளுக்கு விளக்கமாகவும், சுருக்கமாகவும் இருவிதமாக பதில் கூறலாம். சுருக்கமான பதிலே அறிவுடையவர்களுக்கு மிக பயனளிக்கக்கூடியதாகவும், அதுவே மிகப் பெரிய விஷயமாகவும் அமைந்துவிடுகிறது. இதைக் குறித்து அல்லாஹ் தன் திருமறையில் கூறும் போது :

> (நபியே!) அல்லாஹ்வே இவ்வேதத்தை உம்மீது இறக்கினான்; இதில் (தெளிவாகவும்) குறிப்பாகவும் உள்ள அர்த்தத்தையுடைய வசனங்களும் இருக்

கின்றன. இவைதான் இவ்வேதத்தின் அடிப்படையாகும். மற்றவை பல பொருள்களுக்கு இடர்ப்பாடான (உவமைப்பொருள் கொண்ட)வையாகும். எவர்களுடைய இருதயங்களில் மாறுபாடு இருக்கிறதோ அவர்கள் அதில் குழப்பத்தை உண்டுபண்ணக் கருதியும், (இத்தகைய வசனங்களில் தவறான) பல அர்த்தங்களைத் தேடியும் பின்பற்றுகின்றனர். (3: 7)

"சந்தேகத்திற்குரிய காரியங்களைப் பின்பற்றக்கூடியவர்களை நீங்கள் பார்ப்பீர்களானால் குழப்ப வாதிகள் என்று அல்லாஹ்வால் பெயர் வைக்கப்பட்டவர்கள் என அறிந்து அவர்களோடு இருப்பதை நீங்கள் அஞ்சிக்கொள்ளுங்கள்".

என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியதாக ஸஹீஹான ஹதீஸில் வந்துள்ளது.

உதாரணமாக ஷிர்க்கான செயல்களைப் புரியக்கூடியவர்கள்,

"அல்லாஹ்வின் அவ்லியாக்களுக்கு நிச்சயமாக யாதொரு பயமுமில்லை; அவர்கள் துக்கிக்கவும் மாட்டார்கள் என்பதை நீங்கள் அறிந்துகொள்ளுங்கள்" (10 : 62)

என்ற இறைவசனத்தைத் தங்கள் செயல்களுக்கு ஆதாரமாகக் கூறுவார்கள். மேலும் ஷபாஅத் இருக்கிறது; நபிமார்களுக்கு அல்லாஹ்விடத்தில் பெரிய அந்தஸ்திருக்கிறது என்றெல்லாம் கூறி, பெருமானார் (ஸல்) அவர்களின் ஹதீஸிலிருந்து சிலதைத் தங்களுடைய தவறான கொள்கைகளுக்கு ஆதாரமாகவும் எடுத்துக்கொள்வார்கள். அவர்களுடைய இந்தக் கூற்றுக்களை உன்னால் புரிந்துகொள்ள முடியவில்லையானால் கீழ்க்கண்டவாறு பதில் கூறிவிடு:

தங்கள் உள்ளங்களில் வழிகேடு இருப்பவர்கள் உறுதியானவைகளை விட்டுவிட்டு, சந்தேகமானவைகளைப் பின்பற்றுகின்றனர் என அல்லாஹ் கூறிவிட்டான். மேலும்

ஷிர்க்கான செயல்களைச் செய்து அல்லாஹ்விற்கு இணை கற்பித்தவர்கள் அல்லாஹ்விற்குரிய பரிபாலனைப் பண்பு களான அவன் படைப்பவன், உணவளிப்பவன் என்பன போன்ற பண்புகளை நம்பியிருந்தார்கள். இருப்பினும் 'மலக்கு'கள் நபிமார்கள், அவுலியாக்கள் எல்லாம் எங்க ளுக்காக அல்லாஹ்விடம் பரிந்து பேசுகிறார்கள் என்று கூறி அவர்கள் அல்லாஹ்விடம் கேட்கவேண்டியவற்றை இவர் களிடம் கோரிவந்தார்கள். இதனால் அவர்கள் காபிர்களாகக் கருதப்பட்டார்கள் என்றெல்லாம் அல்லாஹ் தன் திருமறை யில் கூறியிருப்பது எந்த சந்தேகத்திற்கும் இடமில்லாததும், தெளிவானதும், உறுதியானதுமாகும். யாரும் இதன் பொருளை மாற்றி மறைக்க முடியாது. ஆனால் ஷிர்க்கான செயல்களைச் செய்யக்கூடியவர்கள் கூறும் இறைவசனத் தையும், பெருமானார் (ஸல்) அவர்கள் ஹதீஸின் பொருளையும் என்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை என்று பதில் கூறிவிட வேண்டும்.

ஆனால் அல்லாஹ்வுடைய பரிசுத்தக் குர்ஆனில் எந்த முரண்பாடும் கிடையாதென்றும், பெருமானார் (ஸல்) அவர் களுடைய சொல் அல்லாஹ்வுடைய சொல்லிற்கு மாற்றமான தல்ல எனவும் நான் உறுதிகொள்கின்றேன் என்றும் கூறி விடுவதே உறுதியான பதிலாக இருக்கிறது. ஆனால் அல்லாஹ்வின் அனுக்கிரகம் யாருக்கிருக்கிறதோ அவர்களே இதைப் புரிந்துகொள்ள முடியும். எனவே இதைச் சாதா ரணமாகக் கருதிவிட வேண்டாம். ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

> "பொறுமையுடையவர்களையும், பெரும் பாக்கியத்தை யுடைய பாக்கியசாலிகளையும் தவிர மற்ற எவரும் இதனை அடையமாட்டார்கள்". (41 : 35)

**விரிவான பதில் :**

அல்லாஹ்வின் எதிரிகள் பல குதர்க்கக் கேள்விகளை எழுப்பி மக்களை நேரான மார்க்கத்தை விட்டும் திருப்பிவிடு

கின்றனர். இவர்களுக்கு சில சந்தேகங்கள் உள்ளன. அவையாவன:

நாங்கள் அல்லாஹ்விற்கு இணைவைப்பதில்லை, படைப்பவனும் உணவளிப்பவனும், நன்மை தீமைக்குரியவனும் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை என்று நாங்கள் சான்றுபகர்கின்றோம். அவன் தனித்தவன், இணையற்றவன், முஹம்மது (ஸல்) அவர்கள் தனக்கே எந்த நன்மையும் சங்கடமும் செய்துகொள்வதற்கு இயலாதவர்களாக இருக்கும்போது, அப்துல் காதிர் ஜீலானி போன்றவர்களால் எப்படி முடியும்? இருப்பினும் நாங்கள் பாவியாக இருக்கின்றோம். நல்லோர்களுக்கு அல்லாஹ்விடத்தில் நல்ல அந்தஸ்துள்ளது, எனவே அவர்களின் அந்தஸ்த்தால் (பொருட்டால்) அல்லாஹ்விடம் கேட்கின்றோம் எனக் கூறுகிறார்கள்.

பதில் :

நாம் முன்னர் குறிப்பிட்டது போன்று, பெருமானார் (ஸல்) அவர்கள் யாரை எதிர்த்துப் போராடினார்களோ அந்த மக்களும் நீங்கள் நம்பியது போன்றுதான் நம்பியிருந்தார்கள், அதாவது அவர்கள் வணக்கம் செலுத்தி வந்த சிலைகளுக்கு எவ்வித பரிபாலன சக்தியுமில்லை என்று உறுதி கொண்டிருந்தார்கள், ஆனால் அவர்கள் அச்சிலைகளின் பொருட்டையும், அவைகளின் பரிந்து பேசலையும் (ஷபா அத்தையும்) நாடினார்கள், எனவே அல்லாஹ் அவர்களை காபிர்கள் எனக் கூறினான், என்று பதில் கூறி முன்னர் கொடுக்கப்பட்டுள்ள இறைவசனங்களை † ஓதிக் காண்பிக்க வேண்டும்

சந்தேகம் : 2

இந்த இறை வசனங்கள் சிலை வணக்கம் புரியக்கூடியவர்களைக் குறிந்து இறங்கியதாயிற்றே? நல்லடியார்களை எப்படி சிலைகளுக்கு சமமாக்குகிறீர்கள்?

---

† இது பற்றிய இறை வசனங்களை 2, 3-ம் பக்கங்களில் பார்க்கவும்.

பதில் :

பரிபாலன சக்திகள் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தமானதென பல தெய்வக் கொள்கைகாரர்கள் சான்று பகர்கிறார்கள் என்றும், அச்சிலைகளிடமிருந்தும் பரிந்து பேசலை (ஷபாஅத்தை) தவிர வேறு எதையும் அவர்கள் நாடவுமில்லை, என்றும் நீங்கள் நம்புகிறீர்கள், இவ்வாறு நம்பிவிட்டு அந்த காபிர்களுடைய செயலை நீங்களும் செய்கிறீர்கள், அப்படியானால் உங்களுடைய செயலுக்கும் அவர்களுடைய செயலுக்குமிடையில் என்ன வேறுபாடு இருக்கிறது?

நிராகரிப்பவர்கள் பலவிதமாக இருக்கின்றார்கள், சிலர் நல்லவர்களையும், சிலைகளையும் அழைத்து உதவி தேடுகின்றனர், வேறு சிலர் அல்லாஹ் கீழ்காணும் வசனத்தில் குறிப்பிடுவதுபோல் அவுலியாக்களை அழைத்து உதவி தேடுகின்றனர்.

> “தங்களை இறைவன்பால் நெருக்கிவைப்பதற்காக இறைவனிடம் நெருங்கியவர் யார் என்பதைத் தேடித் திரிகின்றனர்” (17 : 57)

நபி ஈஸா (அலை) அவர்களையும் அவர்கள் தாயார் மர்யம் (அலை) அவர்களையும் அழைத்து சிலர் உதவி தேடினர், ஆனால் அல்லாஹ் கூறுகின்றான் :

> “மர்யமுடைய மகன் மஸீஹ் ஒரு தூதரேயன்றி (ஆண்டவரோ ஆண்டவனுடைய குமாரரோ) அல்ல, இவருக்கு முன்னரும் (இவரைப்போல்) தூதர்கள் பலர் (வந்து) சென்று விட்டனர். அவருடைய தாயும் (ஆண்டவனல்ல) அவள் மிக்க உண்மையான ஒரு சத்தியவதியாகத்தான் இருந்தாள். இவ்விருவரும் (உலகிலிருந்த காலமெல்லாம் மற்ற மனிதர்களைப் போல்) உணவு உட்கொண்டே (வாழ்ந்து) வந்தனர். (ஆகவே இவ்விருவர்களும் எவ்வாறு ஆண்டவர்களாவார்கள்?) இதனை நாம் பல அத்தாட்சிகள் மூலம் அவர்களுக்கு எவ்வாறு தெளிவாக்கினோம் என்பதை நபியே நீர் கவனியும், (உண்மையிலிருந்து) அவர்கள் எவ்வளவு தூரம் விலகிச் சென்றுவிட்டனர் என்பதையும் நீர் கவனியும். (5:75)

மற்றொரு இறை வசனம் கூறுவதாவது :

"(மலக்குகளை வணங்கிக் கொண்டிருந்த) அவர்கள் யாவரும் ஒன்று சேர்க்கப்படும் நாளில், மலக்குகளை நோக்கி "இவர்கள்தானா உங்களை வணங்கிக்கொண்டிருந்தவர்கள்? என்று கேட்கப்படும். அதற்கவர்கள் (எங்கள் இறைவனே!) நீ மிகப் பரிசுத்தமானவன். நீதான் எங்கள் இரட்சகன், அவர்களன்று. இவர்கள் (எங்களையல்ல) ஜின்களையே வணங்கிக் கொண்டிருந்தார்கள்" (34:40)

மற்றொரு இடத்தில் அல்லாஹ் கூறுகிறான் :

"அல்லாஹ் (மறுமை நாளில் நபி ஈசாவை நோக்கி) மர்யமுடைய மகன் ஈசாவே! "அல்லாஹ்வைத் தவிர, என்னையும், என்னுடைய தாயையும் இரண்டு தெய்வங்களாக எடுத்துக் கொள்ளுங்கள்" என்று மனிதர்களுக்கு நீர் கூறினீரா? என்று கேட்பான். அவர் கூறுவார், நீ மிகப் பரிசுத்தமானவன், எனக்கு ஒரு சிறிதும் தகாததை நான் ஒரு போதும் கூறவில்லை. அவ்வாறு நான் கூறியிருந்தால் நிச்சயமாக நீ அதனை அறிந்திருப்பாயே, என் உள்ளத்தில் உள்ளதை நீ நன்கறிவாய். உன் உள்ளத்தில் உள்ளதை நான் அறியமாட்டேன். நிச்சயமாக நீதான் மறைவான யாவற்றையும் நன்கறிந்தவன். (5:116)

சிலைகளையும், இறந்த நல்லோர்களையும் அழைத்து உதவி தேடியவர்களை காபிர்கள் என அல்லாஹ் கூறிவிட்டான். அவர்களோடுதான் பெருமானார் (ஸல்) அவர்கள் போராடினார்கள், என்று பதில் கூறவேண்டும்.

சந்தேகம் :

பல தெய்வக் கொள்கையுடையோர் சிலைகளிடத்தில் நேரடியாக உதவி தேடினார்கள். ஆனால் நாங்களோ அல்லாஹ் ஒருவன்தான் நன்மை தீமை செய்யும் சக்தியுடை

யவன், அவனே பரிபாலிக்கக் கூடியவன் என்று சான்று பகர்கிறோம். நல்லோர்களுக்கு எவ்வித சக்தியுமில்லை, ஆனால் அவர்களை நாடி அவர்களின் (ஷபாஅத்) பரிந்து பேசலைத்தானே நாங்கள் விரும்புகிறோம்?

பதில் :

நீங்கள் கூறிக் கொள்வது போன்றுதான் பல தெய்வக் கொள்கையுடையோரும் கூறினார்கள். இவ்விரு கூற்றிற்கு மிடையில் எவ்வித வேறுபாடுமில்லை. இதைப்பற்றி அல்லாஹ் கூறுகிறான் :

> "எவர்கள் அல்லாஹ் அல்லாதவற்றை (தங்களுக்குப்) பாதுகாவலர்களாக எடுத்துக்கொண்டிருக்கிறார்களோ அவர்கள் "அத்தெய்வங்கள் எங்களை அல்லாஹ்வுக்கு மிக்க சமீபமாக்கி வைக்கும் என்பதற்காகவேயன்றி இவற்றை நாங்கள் வணங்கவில்லை, என்று கூறுகின்றனர். (39:3)

> "இத்தெய்வங்கள் அல்லாஹ்விடத்தில் எங்களுக்காகப் பரிந்து பேசுகின்றன (என்று கூறினர்) (10:18)

மேற்கூறப்பட்ட மூன்று சந்தேகங்களே ஷிர்க்கான காரியங்களைச் செய்கின்றவர்கள் கூறும் பெரிய சந்தேகங்களாகும். இதை அல்லாஹ் தன் திருமறையில் மிகத் தெளிவாகக் கூறிவிட்டான், என்பதை புரிந்து விளங்கிவிட்டால் இதை விட மிக இலேசான பதில் வேறு ஒன்றுமில்.

இது அல்லாமல் வேறு சில சந்தேகங்களும் அவர்களுக்கு இருக்கின்றன, அவையாவன :

சந்தேகம் :

நான் அல்லாஹ்வைத்தான் வணங்குகிறேன். கஷ்ட துன்ப நேரங்களில் இறந்த நல்லோர்களிடம் பாதுகாவல் தேடுவதும், அவர்களை அழைத்து உதவி தேடுவதும் வணக்கத்தில் பட்டதல்லவே?

**பதில்:**

வணக்கத்தை அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் தூய்மையாகச் செய்வது உன் மீது கடமையாக்கப்பட்டுள்ளது என்பதை நீ ஒப்புக்கொள்கிறாயா? என்று அவனிடம் கேட்க வேண்டும். அதற்கு அவன் 'ஆம்' எனப் பதில் கூறுவான். அப்போது அவனிடம், "அல்லாஹ் ஒருவனுக்கு மட்டும் தூய்மையாகச் செய்வது உன்மீது கடமையாக்கப்பட்டுள்ளதே அந்த வணக்கம் எது? அதன் வகைகள் எத்தனை? என்பதை எனக்கு விளக்கிக் கூறு" என்று கேட்கவேண்டும். அதற்கு அவனால் பதில்கூற முடியாது; அப்போது அவனுக்கு வணக்கத்தின் பொருளை விளக்கவேண்டும்.

> "(விசுவாசிகளே!) நீங்கள் மிக்க தாழ்மையாகவும், மெதுவாகவும் உங்கள் இறைவனிடமே (உங்களுக்குத்) தேவையானவைகளைக் கோரிப் பிரார்த்தியுங்கள்".
> (7 : 55)

என அல்லாஹ் கூறியுள்ளான். இவ்வசனத்தை ஓதி விளக்கியபின், இவ்வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ள (துஆ) "அழைத்துத் தேவைகளை வேண்டுதல்" என்பது வணக்க வகைகளைச் சார்ந்ததுதானா? என அவனிடம் கேட்க வேண்டும். அதற்கு 'ஆம்' வணக்க வகைகளைச் சார்ந்தது தான் என்ற பதிலையே கூறுவான் ஏனென்றால்,

"துஆ வணக்கங்களின் சாரமாகும்" எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

இப்போது அவனுக்குக் கூறவேண்டும்: 'துஆ' என்பது அல்லாஹ்விற்குரிய வணக்க வகைகளைச் சார்ந்ததாகும் என நீ உறுதிகொண்டு அவனை இரவுபகலாகப் பயபக்தியோடு அழைத்து உதவி தேடுகிறாய். பின்னர் நீ எந்த நோக்கத்திற்காக அல்லாஹ்வை அழைத்தாயோ அதே நோக்கத்திற்காக நபியையும், வலியையும், வேறு யார்யாரையுமோ அழைக்கின்றாய், இவ்வாறு அல்லாஹ் அல்லாதவர்களை அழைப்பது அல்லாஹ்விற்குச் செய்யவேண்டிய வணக்

கத்தில் இணைவைப்பதாகக் கருதப்படுமா இல்லையா? என்று அவனிடம் வினவினால், 'ஆம்' இணைவைப்பதாகவே கருதப் படும் எனக் கண்டிப்பாகப் பதில் கூறுவான். அப்போது அவனுக்குச் சொல்லவேண்டும், அல்லாஹ் தன் திருமறையில் கூறுகிறான்:

"(நபியே!) நீர் உமதிறைவனைத் தொழுது அவனுக்கு அறுத்துப் பலியிடும்" (108 : 2)

என்ற அல்லாஹ்வின் இக்கட்டளைக்கிணங்க அவனுக்கு வழிபட்டு நீ அவனுக்கு அறுத்துப் பலியிடுகிறாய். இவ்வாறு அறுத்துப் பலியிடுவது வணக்கமா இல்லையா? என்று அவனிடம் கேட்டால், 'ஆம்' வணக்கம்தான் என நிச்சயம் கூறுவான்.

அல்லாஹ்விற்குச் செய்ததுபோன்று நபி, வலி போன்ற படைப்பினங்கள் யாருக்காவது நீ அறுத்துப் பலியிட்டால் அது அல்லாஹ்விற்கு இணை வைப்பதாகக் கருதப்படுமா இல்லையா? என்று அவனிடம் கேட்டால், இணை வைப்பது தான் என நிச்சயம் கூறுவான்.

அப்படியானால் அல்லாஹ்வின் திருவசனங்கள் யார் விஷயத்தில் இறங்கியதோ அந்த முஷ்ரிகீன்கள் மலக்கு களையும், இறந்த நல்லடியார்களையும் வணங்கி வந்தார்களா? என்று கேட்டால் ஆம் எனக் கூறுவான். அப்படியானால் அவர்கள் செலுத்திவந்த வணக்கமானது, துஆ, அறுத்துப் பலியிடுதல், அபயம் தேடுதல் போன்றவைகளாகவே இருந் ததேயொழிய வேறு எந்தவணக்கமும் அவர்கள் புரியவில்லை. ஏனெனில், அவர்கள் தங்களை அல்லாஹ்வின் அடியார்கள் என்றும், அவன் ஆதிக்கத்தின் கீழ் இருக்கின்றார்கள் என்றும், அவன்தான் எல்லாக் காரியங்களையும் பரிபாலிக்கின்றான் என்றும் நம்பி உறுதிகொண்டிருந்தார்கள். இந்த நம்பிக்கை யோடு இறந்த நல்லோர்களை அழைத்து உதவி தேடினார்கள்.

அவர்களின் அந்தஸ்த்தாலும், சிபாரிசாலும் அல்லாஹ்வின்பால் நெருங்க நாடினார்கள். இதன் காரணத்தினால்தான் அவர்கள் முஷ்ரிகீன்களாகக் கருதப்பட்டார்கள் என்பது மிகவும் வெளிப்படையான விஷயமாகும்.

நீ செய்து வருகின்ற செயல்களுக்கும் அன்றைய முஷ்ரிகீன்கள் செய்து வந்த செயல்களுக்குமிடையில் என்ன வேறுபாடு இருக்கிறதென்பதை இப்போது கூறு, என அவனிடம் கேட்கவேண்டும்.

**சந்தேகம் :**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய ஷபாஅத்தை நீ மறுத்து அதிலிருந்து விலகிக்கொள்கிறாயா?

**பதில் :**

ஷபாஅத்தை நான் மறுக்கவில்லை, அது இல்லை எனக் கூறி அதைவிட்டு நான் விலகவுமில்லை, மாறாக பெருமானார் (ஸல்) அவர்கள் ஷபாஅத்துச் செய்யக்கூடியவர்களாகவும், பிறருக்கு ஷபாஅத்துச் செய்ய அனுமதி கொடுக்கப்பட்டவர்களாகவும் இருக்கிறார்கள் என நம்புகிறேன். அவர்களின் ஷபாஅத் எனக்குக் கிடைப்பதை ஆதரவு வைத்து, ஆசைப்படுகின்றேன், ஆனால் ஷபாஅத் அனைத்தும் அல்லாஹ்வின் கையிலிருக்கிறது. இதைப்பற்றி அல்லாஹ் கூறும்போது :

> "சிபாரிசுகள் யாவும் அல்லாஹ்வுக்கே உரியன. (என்று நபியே!) நீர் கூறும்" (39 : 44)

என்று விளக்குகிறான், அல்லாஹ்வின் அனுமதியின் பின்னரே பிறர் ஷபாஅத்துச் செய்கின்றனர்.

> "அல்லாஹ்வின் அனுமதியின்றி அவனிடத்தில் எவருக்காகிலும் யார்தான் பரிந்து பேச முடியும்?" (2:255)

என அல்லாஹ் கூறுகிறான்; மேலும்

"அல்லாஹ் விரும்பியவர்களுக்கன்றி மற்றெவருக்கும் இவர்கள் சிபாரிசு செய்ய மாட்டார்கள்" (21:28)

என்று அல்லாஹ் கூறுவது போன்று, யாருக்காவது பிறர் ஷபாஅத்து செய்வதாக இருந்தால் அல்லாஹ்வின் அனுமதி அவருக்கு கிடைத்ததின் பின்னரே செய்கின்றார். (அதாவது இவர் விஷயத்தில் நீர் சிபாரிசு செய்யலாம் என அல்லாஹ் அனுமதி வழங்கியதன் பின்னரே ஷபாஅத்துச் செய்ய முடியும்)

"இஸ்லாத்தையன்றி (வேறொரு) மார்க்கத்தை எவரே னும் விரும்பினால், நிச்சயமாக அவனிடமிருந்து (அது) அங்கீகரிக்கப்படமாட்டாது" (3 : 85)

என்று அல்லாஹ்வின் சொல்லிற்கிணங்க 'தவ்ஹீத்' என்னும் ஏக இறைக் கொள்கையைத்தான் அல்லாஹ் விரும்பு கிறானே தவிர மற்ற ஷிர்க்கான எதையும் அவன் விரும்புவ தில்லை.

ஷபாஅத்துக்கள் அனைத்தும் அல்லாஹ்விற்கே சொந்த மாக இருக்கிறது, அவனுடைய அனுமதியின்றி யாரும் ஷபா அத்துச் செய்வதில்லை, நபியாயினும், அல்லது வேறு யாரா யினும் அல்லாஹ்வின் அனுமதியின்றி யாரும் சிபாரிசு செய்வதில்லை, ஷிர்க்கான எந்தச் செயலும் செய்யாத ஏக இறைக்கொள்கையுடையவர்களான (முவஹ்ஹிதீன்)களுக்கு மட்டும்தான் அல்லாஹ்வின் அனுமதி கிடைக்கும், என்று நாம் அறியும்போது, ஷபாஅத் எல்லாம் அல்லாஹ்விற்கே சொந்தமானது என நம்பி, ஷபாஅத்தை அதற்கு உரிய வனை அல்லாஹ்விடமே கேட்கவேண்டும், அதாவது, யா அல்லாஹ்! பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களு டைய ஷபாஅத்தை எனக்கு கிடைக்காமல் ஆக்கிவிடாதே, என் விஷயத்தில் அவர்கள் செய்கின்ற ஷபாஅத்தை நீ அங்கீகரித்துக்கொள், என்றுதான் கேட்கவேண்டும், என்பது மிகத் தெளிவாகிவிட்டது.

**சந்தேகம் :**

பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு ஷபா அத்து கொடுக்கப்பட்டுள்ளது. (அதாவது பிறருக்கு - சிபாரிசு செய்ய அனுமதிவழங்கப்பட்டுள்ளார்கள்) அவர்களுக்கு கொடுக்கப்பட்டுள்ள ஷபா அத்திலிருந்து தானே நான் கேட்கின்றேன்?

**பதில் :**

ஆம், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் ஷபா அத்தை வழங்கியுள்ளான், அதே நேரத்தில் அந்த ஷபா அத்தை அல்லாஹ்விடம் நீ கேட்காமல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்பதை தடையும் செய்துள்ளான்,

> "அல்லாஹ்வுடன் மற்றெவரையும் அழைத்து உதவி தேடாதீர்கள்" (72 : 18)

என அல்லாஹ் கூறுகின்றான்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மட்டுமன்றி, மலக்குகளும், அவுலியாக்களும், குழந்தைகளும் மறுமையில் பிறருக்காக ஷபா அத்துச் செய்ய அல்லாஹ் அனுமதி கொடுத்துள்ளான் என ஹதீஸில் வந்துள்ளது, இவர்களெல்லாம் ஷபா அத்துக் கொடுக்கப்பட்டிருக்கிறார்கள் எனவே இவர்களிடமிருந்து ஷபா அத்தை நான் கேட்கிறேன் என்று உன்னால் கூறமுடியுமா?

கேட்கலாம் என நீ கூறுவாயானால் அல்லாஹ் தன் திருமறையில் கூறியது போன்று இறந்த நல்லோர்களை வணங்கும் கூட்டத்தை சார்ந்தவனாக நீ ஆகிவிடுகின்றாய், கேட்பது கூடாது என்று நீ கூறினால் "அல்லாஹ் அவர்களுக்கு கொடுத்த ஷபா அத்திலிருந்து தானே கேட்கின்றேன்" என்ற உனது வாதம் தோல்வியடைந்து விடுகிறது.

**சந்தேகம் :**

நான் அல்லாஹ்விற்கு எதையும் இணையாக்கவில்லை, அல்லாஹ் என்னை அதைவிட்டும் காப்பாற்றட்டும், ஆனால் இறந்த நல்லோர்களை அழைத்து உதவி தேடுவது ஷிர்க் அல்லவே?

**பதில் :**

விபச்சாரம் செய்வதை தடை செய்திருப்பதைவிட பன்மடங்கு அதிகமாக ஷிர்க்கான காரியங்கள் செய்வதை அல்லாஹ் தடை செய்திருக்கின்றான் என்றும், ஷிர்க்கான செயலை அல்லாஹ் மன்னிப்பதில்லை என்றும் நீ நம்பி உறுதி கொள்கின்றாய். மன்னிக்கப்படாத குற்றமான ஷிர்க்கின் பொருள் என்ன? அதன் வகைகள் எத்தனை என்று உன்னிடம் கேட்டால் தெரியாது என்று சொல்கின்றாய். ஷிர்க் என்றால் என்னவென்று நீ தெரியாமலிருக்கும் போது, ஒரு விஷயத்தை இது ஷிர்க் அல்ல என்று உன்னால் எப்படி கூற முடியும்? ஷிர்க்கின் பொருளை நீ தெரிந்தாலல்லவா ஒரு செயலை இது ஷிர்க் என்றும் ஷிர்க் அல்ல என்றும் உன்னால் தீர்ப்பு வழங்க முடியும்?

அல்லாஹ் ஒரு செயலை விலக்கி, அதைச் செய்யக் கூடியவனுக்கே மன்னிப்பில்லை எனக் கூறியிருக்கும் போது அது என்னவென்று நீ தெரிந்து கொள்ளாமலும், தெரிந்தவர்களிடம் அதுபற்றி கேட்காமலும் இருப்பது சரியா? அல்லாஹ் ஒன்றை உன்மீது ஹராமாக்கிவிட்டு அதை உனக்கு விளக்கித் தரவில்லை என நீ நினைத்துக் கொண்டாயா?

**சந்தேகம் :**

சிலைகளை வணங்குவதுதான் ஷிர்க்கான செயலாகும், நாங்கள் சிலைகளை வணங்கவில்லையே?

**பதில் :**

சிலை வணக்கம் என்றால் என்ன? அக்கால முஷ்ரிகீன்கள் வணங்கிவந்த பலகைகள், மரங்களுக்கெல்லாம் படைத்து உணவளிக்கின்ற தன்மையும் அவைகளை அழைக்கின்றவர்களின் காரியங்களை பரிபாலிக்கின்ற ஆற்றலும் அவற்றிற்குண்டு என அம்மக்கள் நம்பி வந்தார்கள் என்று நீ நினைக்கின்றாய்? இல்லவே இல்லை. அப்படி நீ நினைத்தால் அதை குர்ஆன் பொய்ப்பிக்கின்றது. ஒருபோதும் அவர்கள் அவ்வாறு நம்பவில்லை, ஏனெனில், அல்லாஹ் கூறுகின்றான்;

"(நபியே!) நீர் அவர்களை நோக்கி வானத்திலிருந்தும் பூமியிலிருந்தும் உங்களுக்கு உணவளிப்பவன் யார்? ........எல்லாக் காரியங்களையும் பரிபாலிப்பவன் யார்? என்று கேட்டால், அல்லாஹ்தான் என்று கூறுவார்கள்" (10 : 31)

**சந்தேகம் :**

மரத்தையும், கல்லையும், சமாதி மீதுள்ள கட்டிடத்தையும் நாடிச் செல்லக் கூடியவர்கள் அவற்றை அழைத்து அவைகளுக்கு அறுத்துப் பலிகொடுத்து, அவைகள் எங்களை அல்லாஹ்வின்பால் சேர்த்து வைக்கின்றன, அவைகளின் பரக்கத்தால் எங்களுக்கு தொல்லைகள் ஏதும் வருவதில்லை என்று ஒருவன் கூறுவதுதானே ஷிர்க்?

**பதில் :**

ஆம், நீ கூறியது முற்றிலும் உண்மை, அது ஷிர்க்குத்தான். அதே ஷிர்க்கைத்தானே நீங்களும் செய்கிறீர்கள். அதாவது, கற்களிடத்திலும், கப்றுகள் மீது கட்டப்பட்டுள்ள கட்டிடங்களிடத்திலும் இவ்வாறே நீங்களும் செய்கிறீர்கள், இந்த செயல்கள்தான் சிலைவணக்கமாகும் என்பதை இது நிரூபிக்கிறதல்லவா?

சிலை வணக்கம் மட்டும்தான் ஷிர்க் என்றும் இறந்த நல்லடியார்களை அழைத்து உதவி தேடுவது ஷிர்க்கை சார்ந்ததல்ல என்றும் நீ கருதுகிறாயா? இவ்வாறு கருதுவது தவறாகும். ஏனென்றால், மலக்குகளையும் நபி ஈசாவையும் இறந்த நல்லோர்களையும் அழைத்து உதவி தேடியவர்களைப் பற்றி அவர்கள் காபிர்கள் என குர்ஆன் கூறிக்கொண்டிருக்கிறது. இக்கூற்று நீ நம்புவதைத் தவறு என நிரூபிக்கிறதல்லவா? இதை நீ சிந்தித்து உணரும்போது, அல்லாஹ்விற்குச் செய்யவேண்டிய வணக்கங்களில் எதையும் இறந்த நல்லோர்களுக்குச் செய்வது குர்ஆன் கூறிய ஷிர்க்கின் வகையைச் சார்ந்ததுதான் என நீ ஒப்புக் கொள்வது அவசியமாகும்.

இவ்வாறு கூறுவதின் இரகசியம் என்னவென்றால், அவன் (சந்தேகத்தை எழுப்பியவன்) கூறுகின்றான், "நான்

அல்லாஹ்விற்கு இணைவைக்கவில்லை" என்று. அப்படியானால் இணைவைப்பது என்றால் என்ன? என்று எனக்கு விளக்கு, என அவனிடம் கேட்க வேண்டும். இணைவைப்பது என்பது சிலை வணக்கமாகும், என்று அவன் கூறினால், சிலை வணக்கம் என்றால் என்ன? என்று கேட்கவேண்டும் இப்படி கேட்கும் போது 'நான் அல்லாஹ்வைத்தவிர வேறு யாரையும் வணங்கவில்லை' என்று கூறுவான். அப்படியானால் அல்லாவை மட்டும் வணங்குவதென்றால் என்ன? என்று கேட்க வேண்டும். அதற்கு குர்ஆன் கூறும் சரியான விளக்கத்தை சொல்வானாயின் அதை வரவேற்க வேண்டியதுதான். அதன் விளக்கத்தை அவன் தெரியவில்லையானால், தெரியாத ஒன்றை தெரிந்ததாக நீ எப்படி வாதாட முடியும்? என்று கேட்க வேண்டும்.

இறை வணக்கத்திற்கு தவறான பொருள் கொடுப்பானாயின், அவனுக்கு ஷிர்க் என்றால் என்ன? சிலைவணக்கத்தின் பொருள் என்ன? என்பதை விளக்கும் தெளிவான இறை வசனங்களை எடுத்துரைத்து, இன்று பெரும்பாலான முஸ்லிம்கள் புரிந்துவரக்கூடிய இறந்தவர்களை அழைத்து உதவி தேடுவதுதான் அல்லாஹ்விற்கு இணை வைப்பதாகும் என்று கூறவேண்டும்.

அல்லாஹ் ஒருவனை மட்டும் தூய்மையாக வணங்க வேண்டுமென்ற ஏக தெய்வக் கொள்கையை இவர்கள் வெறுத்து, அக்கொள்கையின்பால் அழைக்கின்ற எங்கள் மீது சாடுகிறார்கள். இவ்வாறுதான் கொள்கையில் இவர்களுடைய தோழர்களான அறியாமைக்கால அராபியர்களும் சாடினார்கள். அவர்கள் கூறினார்கள் :

"முஹம்மது நம் தெய்வங்கள் யாவையும் நிராகரித்து விட்டு வணக்கத்திற்குரியவன் ஒரே ஆண்டவன் தான் என்று ஆக்கிவிட்டாரா? மெய்யாக இது ஓர் ஆச்சரியமான விஷயம்தான்" (38:5)

ஷிர்க்கான செயல்களை புரிந்து வருகின்ற இக்கால மக்கள் இச்செயல்களுக்கு பக்தி, நம்பிக்கை என்று கூறுகின்றனரே அதுவே குர்ஆனில் கூறப்பட்டுள்ள ஷிர்க்காகும். இந்த ஷிர்க்கான செயலை மக்கள் விட்டுவிடவேண்டும் என்பதற்காகவே பெருமானார் (ஸல்) அவர்கள் அக்கால மக்களோடு போராடினார்கள் என்பதை அறியவேண்டும். இதை நாம் தெரிந்து கொள்ளும்போது அறியாமைக்கால மக்கள் செய்து வந்த ஷிர்க்கான செயல்களானது இக்காலத்தில் பெரும்பாலான முஸ்லிம்கள் செய்துவரும் ஷிர்க்கான செயல்களைவிட அளவில் குறைந்ததாகவே இருந்தது என்பதை இரு விஷயங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

[1]அறியாமைக்கால மக்கள் தங்களின் சந்தோஷமான, சுகபோக நேரத்தில்தான் அல்லாஹ்வுடன் மலக்குகளையும், அவுலியாக்களையும், சிலைகளையும், அழைத்து உதவி தேடினார்கள். கஷ்ட துன்ப நேரங்களில் அல்லாஹ் ஒருவனை மட்டுமே தூய்மையாக அழைத்தார்கள். இதைப் பற்றி அல்லாஹ் தன் திருமறையில் கூறும் போது:

“உங்களுக்கு கடலில் (ஏதும்) தீங்கேற்படும் சமயத்தில் (நீங்கள் வணங்கிவரும் போலி தெய்வங்களை மறந்து)

---

[1]இக்கால முஸ்லிம்களில் பலர் தங்களுக்குக் கஷ்டங்கள், துன்பங்கள் ஏற்படும் போது, இறந்துபோன அவுலியாக்களை பேர் கூறி அழைத்து உதவிதேடுகின்றனர். முஹையத்தீன் அப்துல் காதிர் (ரலி) அவர்களை ஆயிரம் தடவை இருட்டறையில் இருந்துகொண்டு அழைத்தால் கஷ்டத்தை எல்லாம் போக்கி விடுவார் என நம்புகின்றனர். துன்பங்கள் விலகுவதற்காக அவுலியாக்களுக்கு நேர்ச்சை செய்கின்றனர். இந்த அவல நிலையை நினைத்துப்பார்க்கும்போது, இக்கால முஸ்லிம்கள் பலரின் ஷிர்க் எவ்வளவு கொடியதென்பதை அறிந்து கொள்ள முடியும்.

அல்லாஹ்வை மட்டுமே அழைத்து உதவிதேடுகிறீர்கள். அவன் உங்களை கரையில் சேர்த்து காப்பாற்றி கொண்டால் அவனை நீங்கள் புறக்கணித்து விடுகிறீர்கள். மனிதன் மகா நன்றி கெட்டவனாக இருக்கின்றான்" (17:67)

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

"(நபியே) அவர்களை நோக்கி நீர் கூறும், "உங்களுக்கு அல்லாஹ்வுடைய வேதனை வந்து விட்டால், அல்லது உங்களுக்கு விசாரணை காலம் வந்துவிட்டால் அல்லாஹ் அல்லாதவர்களையா நீங்கள் (உங்கள் உதவிக்கு) அழைப்பீர்கள் என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா? (இப்போலி தெய்வங்கள் உங்களுக்கு உதவும் என்ற விஷயத்தில்) நீங்கள் உண்மை சொல்பவர்களாயிருந்தால் அவைகளை உங்கள் உதவிக்கு அழையுங்கள். அவ்வாறன்று, அந்நேரத்தில் அல்லாஹ்வையே அழைப்பீர்கள். நீங்கள் இணைவைத்தவைகளை யெல்லாம் மறந்து விடுகிறீர்கள். நீங்கள் எந்தகஷ்டத்திற்காக அல்லாஹ்வை அழைக்கின்றீர்களோ அதை அவன் நாடியவர்களுக்கு நீக்கி விடுவான்" (6:40,41)

மேலும் அல்லாஹ் கூறுகின்றான்:

"மனிதனுக்கு ஏதாவதொரு தீங்கு ஏற்படும்போது முற்றிலும் தன் இறைவனையே பிரார்த்தனை செய்தவண்ணமாயிருக்கின்றான். ஆனால் அல்லாஹ் தன்னுடைய ஏதாவதொரு அருளை அவனுக்கு கொடுக்கும்போது, இதற்கு முன்னர் அவன் எதனை பிரார்த்தனை செய்துகொண்டிருந்தானோ அதனையே மறந்து அல்லாஹ்வுக்குப் பொய்யான தெய்வங்களை இணையாக்கி (மற்றவர்களையும்) அவனுடைய பாதையிலிருந்து வழிகெடுக்கின்றான். (நபியே! அவனை நோக்கி) நீர் கூறும், நீங்கள் (உங்கள்) நிராகரிப்பிலேயே சிறிது காலம் சுகமனுபவியுங்கள் (முடிவில்) நிச்சயமாக நீங்கள் நரகவாசிகளாய்த் தான் இருப்பீர்கள்" (39:8)

**மேலும் அல்லாஹ் கூறுகிறான் :**

> "(கப்பலில் செல்லும் அவர்களைப் புயல்காற்றடித்து நாலா பக்கங்களிலிருந்தும்) அலைகள் மேல் முகடுகளைப் போல் சூழ்ந்து கொள்ளும் சமயத்தில் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு, கலப்பற்ற மனத்துடன் அவனை அழைத்துப் பிரார்த்திக்கின்றனர்" (33:32)

அறியாமைக்கால முஷ்ரிகீன்கள் தங்கள் சந்தோஷமான சுக நேரத்தில் அல்லாஹ்வையும், அவன் அல்லாதவர்களையும் அழைத்தார்கள். கஷ்ட துன்ப நேரத்தில் இணை துணையற்ற அல்லாஹ் ஒருவனை மட்டும் அழைத்தார்கள். சந்தோஷமான நேரத்தில் அழைத்த தங்கள் தலைவர்களையெல்லாம் அடியோடு மறந்து விடுவார்கள். என அல்லாஹ் தன் திருமறையில் விளக்கியுள்ள இந்த விஷயத்தை நன்கு புரிந்து கொள்ளக் கூடியவர்களுக்கு இக்கால முஸ்லிம்கள் செய்துவரும் ஷிர்க்கான செயல்களுக்கும், அக்கால மக்களுடைய ஷிர்க்கான செயல்களுக்குமிடையிலுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ள முடியும். அவர்கள் கஷ்ட நேரத்தில் அல்லாஹ்வை மட்டும் அழைத்தார்கள். இவர்கள் அவுலியாக்களை அழைக்கிறார்கள்.

ஆனால் இது போன்ற விஷயங்களை மன உறுதியோடு விளங்கி செயல் படுகின்றவர்கள் எங்கே இருக்கிறார்கள்? அல்லாஹ் உதவி புரியப் போதுமானவன்[1]

---

[1] குர்ஆன், ஹதீஸின் அடிப்படையில் எழுப்பப்பட்டுள்ள உண்மையான தவ்ஹீத் இக்காலத்தில் பரவஆரம்பித்து அதைப் பின்பற்றுகின்றவர்களும், அதன்பால் அழைக்கின்றவர்களும் அதிகரித்திருப்பது, அல்லாஹ் தன் அடியார்கள் மீது செய்துள்ள அருளும், கருணையுமாகும். மேலும் இமாம்களான இப்னு தைமிய்யா, இப்னுல் கைய்யிம், முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் போன்றவர்கள் எழுதிய புத்தகங்கள் மூலம் உண்மையான தவ்ஹீத் பரவுகிறது. அல்லாஹ் இவர்களுக்கு நற்கூலியைக் கொடுத்தருள்வானாக! (முஹம்மதுபின் ஜமீல்)

இரண்டாவது விஷயம் ;

அறியாமைக்கால மக்கள் அல்லாஹ்விடத்தில் நெருக்கமான நபிமார்களையும், அவுலியாக்களையும், மலக்குகளையும் அழைத்து வந்தார்கள். இவ்வாறே அல்லாஹ்விற்கு வழிப்பட்டு அவனை சதா துதித்துக் கொண்டிருக்கும் பாவம் செய்யாத மரங்களையும் கற்களையும் அழைத்து உதவி தேடினார்கள்.

ஆனால் இக்கால மக்களோ தங்களுடைய ஷேக் எனக் கூறி மக்களில் மிகக் கீழ்த்தரமானவர்களை அழைத்து உதவி தேடுகின்றனர். யாரை அழைக்கின்றார்களோ அவர்களைப் பற்றி அவர்களைப் பின்பற்றுவோர் பல கேவலமான சம்பவங்களையும் கூறிக்கொள்கின்றனர். அதாவது எங்கள் ஷேக்மார்கள் உச்சக்கட்டத்தை எட்டிவிட்டார்கள். எனவே அவர்கள் தொழுவதில்லை. அவர்களுக்கு எல்லாம் ஆகுமாகி விட்டது. எனவே விபச்சாரம், களவு முதலியவைகளைச் செய்து வந்தார்கள் என்றெல்லாம் கதைகள் கூறுகின்றனர். (இவ்வாறு கூறிக் கொண்டே அக்கீழ்த்தரமானவர்களைத் தங்கள் ஷேக் எனக்கூறி பின்பற்றவும் செய்கின்றனர்)

இறந்த நல்லோர்கள் மீதும், பாவமே அறியாத மரங்கள் கற்கள் முதலியவற்றின் மீதும் நம்பிக்கை வைத்து வந்த அறியாமைக்கால மக்களுடைய ஷிர்க்கானது, அநீதி அக்கிரமங்கள் செய்பவர்கள் என தங்கள் ஷேக்மார்களைப் பற்றி கூறிக்கொண்டும், தங்கள் கண்களால் அவர்களுடைய தீய செயல்களைப் பார்த்தும்கூட அவர்கள்மீது நம்பிக்கை வைக்கின்ற இக்கால மக்களின் ஷிர்க்கைவிட குறைவானது தான் என்று கூறலாம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் எந்தமக்களை எதிர்த்துப் போராடினார்களோ அவர்கள் இக்கால மக்களைவிட மிக புத்திசாலிகளாகவும் ஷிர்க்விஷயத்தில் இவர்களைவிட அளவு குறைந்தவர்களாகவுமே இருந்தார்கள் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு தெரியும்போது ஷிர்க்கான செயல்களைப் புரியக்கூடிய இக்கால முஸ்லிம்

களுக்குச் சில பெரிய சந்தேகங்கள் எழுகின்றன. அச்சந்தேகங்கள் எவை என்பதையும், அவற்றின் பதில்களையும் கீழே கவனிப்போம்.

**சந்தேகம் :**

அல்லாஹ் எவர்களை முஷ்ரிகீன்கள் எனக் கூறி அவர்களைப்பற்றி வசனங்களை இறக்கிளுனே அவர்கள் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று கூறி அல்லாஹ்வை நம்பவில்லை; பெருமானார் (ஸல்) அவர்களைப் பொய்ப்பித்தார்கள்; மறுமைநாள் உண்டென்பதை மறுத்தார்கள்; குர்ஆன் சூனியமாகும் எனக்கூறி அதைப் பொய்ப்பித்தார்கள். ஆனால் நாங்களோ "லாஇலாஹ இல்லல்லாஹ், முஹம்மதுர் றசூலுல்லாஹ்" என்று கூறி சான்று பகருகின்றோம்; குர்ஆனை மெய்ப்பிக்கின்றோம்; மறுமை நாளை நம்புகின்றோம்; தொழுது நோன்பு நோற்கின்றோம். இவ்வாறிருக்க எங்களை அந்தக் குறைஷி முஷ்ரிகீன்களுக்கு எவ்வாறு நீங்கள் ஒப்பிட்டுக் கூறலாம்?

**பதில் :**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அறிவித்த விஷயங்களில் சில விஷயங்களில் மட்டும் அவர்களை நம்பிவிட்டு, வேறு சில விஷயங்களில் அவர்களை நம்பாதவன் இஸ்லாத்திற்குப் புறம்பானவனுக காபிராக ஆகிவிடுகின்றான் என எல்லா உலமாக்களும் அபிப்பிராயபேதமின்றிக் கூறியுள்ளனர். இவ்வாறே குர்ஆனிலுள்ள சில விஷயங்களை நம்பிவிட்டு வேறு சில விஷயங்களைப் பொய்ப்பிக்கக் கூடியவனும் காபிராகிவிடுகின்றான்.

உதாரணமாக : தவ்ஹீதை ஏற்று மெய்ப்பித்துவிட்டு அதே நேரத்தில் தொழுகை கடமையில்லை என்று கூறக் கூடியவன், அல்லது தவ்ஹீதையும், தொழுகையையும் ஏற்றுவிட்டு சக்காத் கடமை என்பதை மறுப்பவன், அல்லது தவ்ஹீது. தொழுகை. சக்காத் இவைகளை ஏற்றுவிட்டு நோன்பு கடமை என்பதை மறுப்பவன், அல்லது இவை எல்லாவற்றையும் ஏற்றுவிட்டு ஹஜ்ஜை மறுப்பவன் மேற்குறிப்பிடப்பட்ட எல்லோரும் இஸ்லாத்திற்குப் புறம்பான

காபிர்களாகவே கருதப்படுவார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் காலத்தில் சிலர் ஹஜ் செய்ய பின்வாங்கியபோது அவர்கள் விஷயத்தில் கீழ்க்காணும் வசனத்தை அல்லாஹ் இறக்கினான்.

"எவர்கள் மக்காப் பள்ளிக்கு யாத்திரை செல்லச் சக்தியுடையவர்களாக இருக்கின்றார்களோ அத்தகைய மக்கள் மீது அல்லாஹ்வுக்காக (அங்கு சென்று) அவ்வாலயத்தில் ஹஜ் செய்வது கடமையாகும். எவரேனும் (இதை) நிராகரித்தால் (அதனால் அல்லாஹ்விற்கு ஒன்றும் குறைந்துவிடுவதில்லை. ஏனென்றால்) நிச்சயமாக அல்லாஹ் படைப்புகளில் எதன் தேவையுமற்றவனாக இருக்கின்றான்". (3 : 97)

மேற்கூறப்பட்ட இஸ்லாத்தின் எல்லாக் கடமைகளையும் நம்பிவிட்டு மரணத்திற்குப்பின் மறுமையில் எழுப்பப் படுவதை மறுக்கக்கூடியவனும் ஏகோபித்தக் கருத்துப்படி காபிராகி விடுகின்றான். அவனோடு போர் தொடர்வதும், அவன் பொருளைச் சூறையாடுவதும் ஆகுமாகிவிடுகிறது இது சம்பந்தமாக அல்லாஹ் கூறுகின்றான் :

"நிச்சயமாக எவர்கள் அல்லாஹ்வையும், அவனுடைய தூதர்களையும் நிராகரித்துவிட்டு, அல்லாஹ்வுக்கும், அவனது தூதர்களுக்குமிடையில் பிரிவினை செய்துவிடக் கருதி "தூதர்களில் சிலரை விசுவாசிப்போம்; சிலரை நிராகரிப்போம்" எனவும் கூறி (நிராகரிப்பு, விசுவாசம் ஆகிய) இவற்றிற்கு மத்தியில் ஒரு பாதையை ஏற்படுத்த விரும்புகிறார்களோ அத்தகையோர் நிச்சயமாக நிராகரிப்போர்தாம், நிராகரிப்போருக்கு நாம் இழிவு தரும் வேதனையையே சித்தப்படுத்தி வைத்திருக்கின்றோம்". (4 : 150)

இஸ்லாத்தின் சில விஷயங்களை நம்பிவிட்டு, வேறு சிலவற்றைப் பொய்யாக்கக் கூடியவன் காபிராகிவிடுகின்றான் என அல்லாஹ் தன் திருமறையில் தெளிவுபடுத்தியிருப்பதை அறியும்போது மேற்கூறப்பட்ட சந்தேகம் தானாகவே நீங்கி விடும்.

இந்த சந்தேகத்தை 'அல் அஹ்சா'[1] என்ற ஊரிலிருந்து சிலர் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதியிருந்தனர்.

பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவித்த எல்லா விஷயங்களையும் ஏற்றுவிட்டு தொழுகை, கடமை என்பதை மறுப்பவன் ஏகோபித்த முடிவின்படி காபிராகி விடுகின்றான். இவ்வாறே இஸ்லாத்தின் எல்லாக் கடமைகளையும் ஏற்றுவிட்டு மரணத்திற்குப்பின் எழுப்பப்படுவதை மறுப்பவனும், நோன்பு கடமை என்பதை மறுப்பவனும் இஸ்லாத்தை விட்டு வெளியேறிவிடுகின்றான் என்ற விஷயத்தில் எல்லா மத்ஹபுகளும் ஒன்றுபட்டுள்ளன. இதுபற்றி மேற்கூறப்பட்ட இறைவசனமும் அறிவித்துள்ளதென்பது நிரூபணமாகிவிட்டதனால்.

'தவ்ஹீத்' என்பது பெருமானார் (ஸல்) அவர்கள் கொண்டுவந்த கடமைகளில் மிக முக்கியமானதும், பெரியதுமாகும். தொழுகை, சக்காத், நோன்பு, ஹஜ் இவைகள் எல்லாவற்றையும்விட தவ்ஹீத் மிக முக்கியமானதாகும். மேற்கூறப்பட்ட இஸ்லாமியக் கடமைகளில் எதையேனும் மறுப்பவன் காபிராகிவிடும்போது, பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிய எல்லாவற்றையும் பின்பற்றிவிட்டு எல்லா ரசூல்மார்களின் மார்க்கமான தவ்ஹீதை மறுப்பவன் காபிராகுவதில்லையா?

இந்த மடமையை ஆச்சரியமாக்கியது என்ன? கீழ்க்காணும் வரலாற்றுச் சம்பவத்தைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள்.

---

[1] இது தம்மாம் என்ற ஊரிலிருந்து சுமார் 90 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்னர் அங்கு வாழ்ந்தவர்கள் தான் இந்த சந்தேகத்தைக் கேட்டார்கள். ஆனால் இப்போது அங்குள்ளவர்கள் உண்மையான ஏகத்துவ வாதிகளாகவும் அதன் பிரச்சாரகர்களாகவுமே இருந்து வருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

"பனூஹனீபா"[1] என்பவர்கள் இஸ்லாத்தைத் தழுவி "லாயிலாஹ இல்லல்லாஹ், முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்று கூறி சான்று பகர்ந்தார்கள்; தொழுதும் வந்தார்கள்; பாங்கு சொன்னார்கள். இவ்வாறிருந்தும் இவர்களை எதிர்த்து சஹாபாக்கள் போராடினார்கள்.

"பனூஹனீபா" என்ற இவர்கள் "முசைலமா" என்பவரை நபி என்று கூறியதன் காரணத்தினால்தான் அவர்களோடு போராடப்பட்டது என்று கூறுவார்களானால் ஆம் அதுதான் நாம் விரும்புவதும். அதாவது சாதாரண ஒரு மனிதனை பெருமானார் (ஸல்) அவர்களுடைய அந்தஸ்திற்கு உயர்த்தக்கூடியவன் காபிராக ஆகிவிடுகின்றான். அவனோடு போர் தொடர்வது ஆகுமாகிவிடுகிறது. அவன் கூறிய ஷஹாதத் கலிமாவும், அவன் தொழுகையும் எந்தப் பயனும் அளிப்பதில்லை என்றிருக்கும்போது, "ஷம்சான், யூசுப்"[2] என்பவர்களையோ, ஒரு சஹாபியையோ, அல்லது

[1] "பனூஹனீபா" என்ற கோத்திரத்தினர் "எமாமா" என்ற ஊரில் வாழ்ந்து வந்தார்கள், இவர்கள் "முசைலமா" என்பவரை நபி என நம்பியிருந்தார்கள். இதனால் அவர்கள் மதம் மாறியவர்களாக ஆகிவிட்டார்கள். எனவே ஹிஜ்ரி 11-ம் ஆண்டு அபூபக்கர் (ரலி) அவர்கள் ஒரு படையை காலித்பின் வலீத் (ரலி) அவர்கள் தலைமையின் கீழ் அனுப்பி அவர்களை எதிர்த்துப் போரிடுமாறு கட்டளையிட்டார்கள். எனவே சஹாபாக்கள் இந்த 'பனூஹனீபா' என்பவர்களோடு போர் செய்து வெற்றி பெற்றார்கள். இப்போரில் சுமார் பத்தாயிரம் பேர் மாண்டதாக வரலாறு கூறுகிறது.

[2] "ஷம்சான், யூசுப் என்பவர்கள் நல்லோர்களாக வாழ்ந்து இறந்தவர்களாகும். இவர்களை இமாம் முஹம்மதுபின் அப்துல் வஹ்ஹாப் அவர்கள் காலத்தில் வாழ்ந்த முஸ்லிம்கள் வரம்பு மீறி கண்ணியப்படுத்தி ஷிர்க்கான செயல்களை அவர்கள் சமாதியில் செய்து வந்தார்கள்.

ஒரு நபியையோ வானம் பூமி முதலியவற்றைப் படைத்து, அதிகாரம் செலுத்துகின்ற அல்லாஹ்வின் அந்தஸ்திற்கு உயர்த்தக் கூடியவனின் நிலை என்னவாகும்? அல்லாஹ் மிக தூய்மையாகிவிட்டான். அவன் காரியங்களை வலுப்பமாக்கி யதுதான் என்ன?

"இவ்வாறே இந்த அறிவில்லாதவர்களின் இருதயங்கள் மீது அல்லாஹ் முத்திரையிடுகின்றான்" (30:59)

இன்னும் கூறுவதானால் :

அலி (ரலி) அவர்கள் தன்னுடைய ஆட்சிக் காலத்தில் ஒரு சிலரை உயிரோடு தீயிலிட்டு எரித்தார்கள். எரிக்கப் பட்ட அனைவரும் தங்களை முஸ்லிம்கள் என்றுதான் கூறி யிருந்தார்கள். அவர்கள் அலி (ரலி) அவர்களின் தோழர் களாகவும் இருந்தார்கள். சஹாபாக்களிடமிருந்து கல்வி கற்றார்கள். இவ்வாறிருந்தும், இன்று முஸ்லிம்களில் பலர் எவ்வாறு யூசுப், ஷம்சான் என்பவர்கள் மீதும், இவர்கள் போன்ற இறந்த நல்லோர்கள் மீதும் எந்த நம்பிக்கை வைத் திருக்கிறார்களோ, அதைப்போல்தான் அலி (ரலி) அவர்கள் மீது அவர்கள் நம்பிக்கை வைத்திருந்தார்கள். (அதாவது அலி (ரலி) அவர்கள் மீது அல்லாஹ் உருவெடுத்துவிட்டான். அல்லாஹ்வின் சக்தி அவர்களுக்கு இருக்கிறது, என்றெல் லாம் நம்பினார்கள்)

இந்நம்பிக்கையுடையவர்கள் காபிர்கள் எனக் கூறி அவர்களை தீயிலிட்டுக் கொல்ல எல்லா சஹாபாக்களும் எப்படி ஒன்று சேர்த்து விட்டார்கள்? சிறிது சிந்தியுங்கள். முஸ்லிம்களை சஹாபாக்கள் காபிர்கள் என்று கூறினார்கள் என்று நினைத்துக் கொண்டீர்களா? இல்லவே இல்லை. இஸ்லாத்திற்குப் புறம்பான நம்பிக்கையுடையவர்களாக இருந்ததினால்தான் அவர்களைக் கொன்றார்கள். அலி (ரலி) அவர்கள் மீது தப்பான நம்பிக்கை வைக்கக் கூடியவன் இஸ்லாத்தை விட்டு வெளியேறிவிடும்போது, கப்ருகள் இறந்தவர்கள் மீது நம்பிக்கை வைப்பது தவறில்லை என்று நினைத்துக் கொண்டீர்களா? ஒருபோதும் அப்படி நினைக்க வேண்டாம்.

இன்னும் கூறுவதானால் :

அப்பாஸிய்யா ஆட்சிக் காலத்தில் "பனூஉபைதில் கத்தாஹ்" என்னும் எகிப்து, மொராக்கோ ஆகிய நாடுகளை ஆட்சி செலுத்தி வந்த இவர்கள் "லாயிலாஹ இல்லல்லாஹ், முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" என்று கூறி, தங்களை முஸ்லிம் களெனக் கூறினார்கள். ஜும்ஆ தொழுதார்கள். தொழுகை களை ஜமாஅத்துடன் தொழுதும் வந்தார்கள். ஆனால் இவர் கள் சில இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டங்களுக்கு மாறு செய் ததின் காரணத்தினால், இவர்கள் காபிர்கள் என்றும் இவர் களை கொலைசெய்ய வேண்டும் என்றும் எல்லா உலமாக்களும் ஏகோபித்துக் கருத்துத் தெரிவித்தனர். இவர்கள் வாழ்ந்து வரும் நாடு "பிலாதுல் ஹர்ப்" போர் தொடரப்பட வேண்டிய நாடாகும் என்றும் தீர்ப்பு வழங்கினார்கள். எனவே இதன் பேரில் இவர்களை முஸ்லிம்கள் போர் தொடுத்து அவர்கள் கையிலுள்ள இஸ்லாமிய நாடுகளை கைப்பற்றினார்கள்.

அல்லாஹ்விற்கு இணைவைத்தும், பெருமானார் (ஸல்) அவர்களையும், குர்ஆனையும் பொய்ப்பித்தும், மரணத்திற்குப் பின் எழுப்பப்படுவதை மறுத்தும் வந்ததின் காரணத்தினால் தான் முன்னோர்கள் இஸ்லாத்தைவிட்டு வெளியேறியவர் களாக கருதப்பட்டார்கள் என்றிருக்கவில்லையானால், ஒவ்வொரு மத்ஹபுடைய இமாம்களும் (முர்தத்) மதம் மாறு பவர்களின் சட்டத்தைப் பற்றி ஒரு பாடத்தை தங்கள் நூற் களில் குறிடபிட்டிருப்பதன் அர்த்தமென்ன? — "முர்தத்" என்பதின் கருத்து முஸ்லிமாக இருந்து குப்ரான செயல்புரிவ தால் காபிராக மாறக் கூடியவனாகும், — எந்தெந்த விதத்தி லெல்லாம் மதம் மாறுகிறார்கள் என்பதையெல்லாம் விளக்கி, அதன் சட்டங்களையும் தங்கள் நூற்களில் கூறியுள்ளார்கள். எந்த அளவிற்கு இவ்விஷயங்களை நுக்கமாகனுக் கூறியுள் ளார்கள் என்றால் ஒருவன் உள்ளத்தாலல்லாமல், நாவால் மட்டும் குப்ருடைய வார்த்தைகளைக் கூறுவானாயின், அல்லது தமாஷாகவோ, விளையாட்டாகவோ அவ்வார்த்தை களை கூறுவானாயின், இதனுடைய சட்டங்களையும் தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ளார்கள்.

அல்லாஹ் கூறுகிருன் :

> (நயவஞ்சகர்களாகிய) இவர்கள் நிராகரிப்பான வார்த்தையை மெய்யாகவே கூறியிருந்தும் (அதனை) தாங்கள் கூறவே இல்லை, என்று அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்கின்றனர், அன்றி இவர்கள் இஸ்லாத்தில் சேர்ந்ததன் பின்னர் காபிராகிவிட்டனர். (9:74)

இந்த இறை வசனத்தில் கூறப்பட்டவர்கள் பெருமானார் (ஸல் அவர்கள் காலத்தில் வாழ்ந்தவர்களாகும். இவர்கள் பெருமானாருடன் போர் செய்தார்கள். அவர்களுடன் தொழுதார்கள். சக்காத்து கொடுத்தார்கள். ஹஜ் செய்தார்கள் ஏக இறைக் கொள்கையுடையவர்களாகவும் இருந்தார்கள். இவ்வாறு இருந்தும் கூட, குப்ருடைய ஒரு வார்த்தையைக் கூறியதனுல் அவர்கள் காபிர்கள் என அல்லாஹ் கூறிவிட்டான்.

மேலும் இவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுகிருன் :

> "(நபியே! அவர்களை நோக்கி) அல்லாஹ்வையும் அவனது வசனங்களையும், அவனது தூதரையுமா நீங்கள் பரிகசிக்கின்றீர்கள்? என்று கேளும், நீங்கள் (செய்யும் விஷமத்தனமான பரிகாசத்திற்கு வீண்) புகழ் கூற வேண்டாம் நீங்கள் விசுவாசம் கொண்டதன் பின்னர் நிச்சயமாக அதனை நிராகரித்து விட்டீர்கள்"
>
> (9:66)

இந்த வசனத்தில் "ஈமான் கொண்டதற்குப் பின்னர் காபிராகி விட்டீர்கள் என்று அல்லாஹ் யாரைப்பற்றிக் கூறினுரோ அவர்கள், பெருமானார் (ஸல்) அவர்களோடு "தபூக்" யுத்தத்தில் கலந்து கொண்டவர்களாகும். இவர்கள் சில வார்த்தைகளை தமாஷாகக் கூறியதின் காரணத்தால்தான் அல்லாஹ் அவர்களை காபிர்கள் எனக்

கூறிவிட்டான். [1]இப்போது ஷிர்க்கான செயல்களைச் செய்து வருகின்றவர்கள் கிளப்பிய மேற்சொன்ன சந்தேகத்தை சிந்தித்துப்பாருங்கள். அவர்கள் சந்தேகம் என்னவென்றால்;

"லாயிலாஹ இல்லல்லாஹ்" எனக்கூறி, தொழுது, நோன்பு நோற்றுவரும் முஸ்லிம்களை முஷ்ரிக் என்று கூறுகிறீர்களே?

இதுதான் அவர்களுடைய சந்தேகமாகும். இந்த சந்தேகத்திற்கு நாம் மேலே கொடுத்த பதிலை நன்கு சிந்தித்துப் பாருங்கள். அந்தப் பதிலே இந்த புத்தகத்திலுள்ள விஷயங்களில் மிகப் பயன் தரக்கூடியதாகும்[2].

மூஸா (அலை) அவர்களைப்பின்பற்றிய இஸ்ரவேலர்கள் முஸ்லிம்களாகவும், மிக்க அறிவாற்றல் உடையவர்களாகவும் இருந்தார்கள். இவ்வாறிருந்தும் கூட மூஸா (அலை) அவர்களுடன் கடலைத் தாண்டிச் சென்ற சமயத்தில் முன்பு

---

[1] தபூக் யுத்தத்திற்குச் சென்றவர்களில் ஒருவர் மற்ற முஸ்லிம்களைப் பார்த்து "இவர்களைவிட சாப்பாட்டு ராமன்களையும், பொய்யர்களையும், கோழைகளையும் நாம் பார்க்கவேயில்லை" என்று தமாஷாகக் கூறிவிட்டார். அப்போது இதைக் கேட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒருவர் அவரைப் பார்த்து நீ நயவஞ்சகன், நிச்சயமாக இதை ரசூலுல்லாஹ்விடம் தெரிவிப்பேன் என்று கூறினார். இச்செய்தி பெருமானார் (ஸல்) அவர்களுக்கு தெரியவந்ததும், அல்லாஹ் மேற்கூறப்பட்டவசனத்தை இறக்கினான்.

[2] சிறிது சிந்தியுங்கள், சில முஸ்லிம்கள் சிலவார்த்தைகளை தமாஷாக கூறியதால் அவர்களை அல்லாஹ் காபிர்கள் என்று கூறிவிட்டான். இன்று முஸ்லிம்களில் பெரும் பாலானவர்கள் குப்ருடைய வார்த்தைகளையும், செயல்களையும் எவ்வளவு சாதாரணமாகச் செய்கின்றார்கள்.

**அவர்கள் வணங்கி வந்த விக்கிரகங்களைப் பார்த்ததும், "மூஸாவே! அவர்கள் வைத்திருக்கும் விக்கிரகங்களைப்போல் எங்களுக்கும் ஒரு விக்கிரகத்தை அமைத்துத்தாரும்" என்று கூறினார்கள்.**

இவ்வாறே சில சஹாபாக்கள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் "யாரசூலுல்லாஹ் (நாங்கள் எங்கள் தேவைகளைக் கோரி கயறுகளை முடிந்து போடுவதற்காக) ஒரு மரத்தை எங்களுக்கு ஏற்படுத்துங்கள்" என்று கேட்டார்கள். இதை செவியுற்ற பெருமானார் (ஸல்) அவர்கள் நிச்சயமாக இது மூஸா (அலை) அவர்களிடம் இஸ்ரவேலர்கள் விக்கிரகத்தைக் கேட்டது போலல்லவா இருக்கிறது என்று சத்தியம் செய்து கூறினார்கள்.

**சந்தேகம் :**

ஷிர்க்கான செயல்களைச் செய்யக் கூடியவர்கள் இந்த சம்பவத்தில் ஒரு சந்தேகத்தை எழுப்புவார்கள். அதாவது

---

*அவர்களுடைய சந்தேகம் குழப்பத்தை ஏற்படுத்துகிறது. கேட்பவருக்கு வியப்பூட்டுகிறது. ஏனெனில் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று கூறி, தொழுது, நோன்பு நோற்பவனைப் பார்த்து யாராவது காபிர் எனக்கூறினால் அது அறிவிலிகளிடத்தில் வியப்பாகவே இருக்கும். ஆனால் அவன் தன் ஷிர்க்கின் காரணத்தாலும், அல்லாஹ் அல்லாதவர்களை அழைத்து உதவிதேடியதன் காரணத்தாலும், தன்தொழுகை, நோன்பு போன்ற எல்லா அமல்களையும் வீணாக்கி விட்டான் என்பதை இவர்கள் அறிவதில்லை. அவன் வணக்கம் எவ்வித பயனையும் அவனுக்கு அளிப்பதில்லை என்பதை இவர்கள் புரிவதில்லை. தூய்மையான தவ்ஹீத் எவனிடத்தில் இல்லையோ அவன் அல்லாஹ்வை வணங்கவில்லை. ஷிர்க்கான செயல்களை செய்யக் கூடியவன் எவ்வளவு நல்லமல்கள் செய்தாலும் அவைகள் அனைத்தும் வீணாகவே கருதப்படும். இதனால் எந்த பிரதிபலனும் அல்லாஹ்விடத்தில் கிடைக்கப் போவதில்லை. (முஹம்மது பின் மானிய்)

மூஸா (அலை) அவர்களிடம் இஸ்ரவேலர்கள் அவ்வாறு கேட்டதனால் அவர்கள் காபிர்களாகி விடவில்லையே. இவ்வாறே பெருமானார் (ஸல்) அவர்களிடமும் மரத்தை ஏற்படுத்தக் கேட்ட சஹாபாக்களும் காபிராகவில்லையே?

பதில் :

இஸ்ரவேலர்கள் மூஸாவிடம் விக்கிரகத்தைக் கேட்டார்களேயொழிய அதை அவர்கள் செய்யவில்லை. இவ்வாறே சஹாபாக்களும் பெருமானார் (ஸல்) அவர்களிடம் மரத்தை ஏற்படுத்தக் கேட்டார்களே தவிர அதை அவர்கள் செய்யவில்லை. இஸ்ரவேலர்கள் அவ்வாறு செய்யவில்லை என்பதில் கருத்து வேறுபாடுமில்லை. அதை அவர்கள் செய்திருப்பார்களானால் நிச்சயமாக காபிர்களாகியிருப்பார்கள். இவ்வாறே சில சஹாபாக்கள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் மரத்தை ஏற்படுத்தக் கேட்டதும் அவர்களை பெருமானார் (ஸல்) அவர்கள் கடுமையாகத்தடைசெய்து கண்டித்தார்கள். இந்த தடைக்கு அவர்கள் உட்படாமல் மரத்தை ஏற்படுத்தி அதன் மீது நம்பிக்கையும் வைத்திருப்பார்களானால், அவர்களும் மதம் மாறியிருப்பார்கள். இதுதான் நாம் இங்கு குறிப்பிட விரும்புவதாகும்.

இச்சம்பவத்திலிருந்து கீழ்காணும் படிப்பினைகளை நாம் தெரிந்து அதன்படி செயல்பட வேண்டும்.

(1) சாதாரண முஸ்லிம் மாத்திரமல்ல, ஆலிம்கள் கூட சில ஷிர்க்கான விஷயங்களில் மாட்டிக் கொள்கிறார்கள். அது ஷிர்க்கான செயல் என அவர்களுக்குத் தெரிவதில்லை.

(2) ஒவ்வொருவரும் தமக்குத் தேவையான கல்வியை எழுதிப் படித்துக் கற்றுக் கொள்ளவேண்டும். என்பதை இச் சம்பவம் வலியுறுத்தி விளக்குகிறது அதுமட்டுமல்லாமல் சில அறிவிலிகளிடத்தில் 'தவ்ஹீதைப் பற்றி அறிவது அவசியமாகும்' என்று கூறும்போது தவ்ஹீதுதானே அதை நாங்கள் தெரிந்துதான் இருக்கின்றோம் என்று மிகச் சாதாரணமாகக் கூறிக் கொள்கிறார்களே இது

பெரிய அறியாமையும் ஷைத்தானின் சதியுமாகும் என்பதையும் மேற்குறித்த சம்பவம் நமக்குக் கூறுகிறது.

(3) ஒரு முஸ்லிம் தெரியாமல் சில குப்ருடைய வார்த்தைகளைக் கூறிவிடுகின்றான். அது தவறு என்று அவனுக்கு உணர்த்தப்பட்டால் அந்நேரமே தவ்பா செய்து மன்னிப்புக்கோரி மீண்டுவிடுகின்றான். இவ்வாறே மேற்கூறப்பட்ட சம்பவத்தில் நபி மூஸாவிடம் விக்கிரகத்தைச் செய்து கொடுக்குமாறு கேட்ட இஸ்ரவேலர்களும், பெருமானார் (ஸல்) அவர்களிடம் கயிறுகளை தொங்கவிட மரத்தை ஏற்படுத்துமாறு கேட்ட சஹாபாக்களும் தாங்கள் தெரியாமல் கேட்டதற்காக தவ்பா செய்து மீண்டார்கள்.

(4) சிலர் தாம் செய்யும் சில செயல்களினால் இஸ்லாத்தை விட்டு வெளியேறியவர்களாகக் கருதப்படாவிட்டாலும் அச்செயலை அவர்கள் செய்ததற்காக அவர்களை கடுமையாகக் கண்டிக்கவேண்டும். இவ்வாறே பெருமானார் (ஸல்) அவர்களும் செய்தார்கள்.

**சந்தேகம் :**

ஷிர்க்கான காரியங்களைச் செய்கின்றவர்களுக்கு வேறொரு சந்தேகம் எழுகின்றது.

அதாவது 'உஸாமத் பின்ஸைத்' என்ற சஹாபி ஒரு யுத்தத்தில் எதிரிகளோடு போராடிக் கொண்டிருக்கும்போது, அவர் கையில் ஒரு எதிரி சிக்கினார். அவரை வாளால் வெட்ட முனைந்ததும், அவ்வெதிரி 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று கூறினார். இவர் மரணத்துக்குப் பயந்துதான் கலிமா சொன்னார் எனக்கருதி அவ்வெதிரியை உஸாமா(ரலி) அவர்கள் கொன்றுவிட்டார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் இதை அறிந்த போது, உஸாமாவைப் பார்த்து "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று சொன்னதின் பின்னரா அம்மனிதரைக் கொன்றீர்?, என்று கூறி உஸாமாவின் அந்த செயலுக்கு மறுப்புத் தெரிவித்தார்கள்.

மற்ருேர் ஹதீஸில் 'மக்கள் லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லும்வரை அவர்களோடு போர் புரியுமாறு நான் ஏவப்பட்டுள்ளேன் என நபிகள் பெருமாஞர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

மற்ருேர் ஹதீஸில் : ''லாயிலாஹ இல்லல்லாஹ்'' என்று சொன்னவர்களை ஒன்றும் செய்யக்கூடாது, என பெருமாஞர் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

மேற்கூறப்பட்டுள்ள ஹதீஸ்களை ஷிர்க்கான செயல்களைச் செய்கின்றவர்கள் தங்களுக்கு ஆதாரமாகக் கூறுகின்றனர். இந்த அறிவிலிகளின் நோக்கம் என்னவென்ருல் ஒருவன் 'லாயிலாஹ இல்லல்லாஹ்' என்று சொல்லிவிட்டு ஷிர்க்கான எந்த செயலை செய்தாலும் அதனுல் அவன் ஈமானிற்கு எந்த பங்கமும் ஏற்படுவதில்லை என்பதாகும்

எந்த யூதர்களோடு பெருமாஞர் (ஸல்) அவர்கள் போராடி, அவர்களை யுத்த கைதிகளாகச் சிறை செய்தார்களோ அவர்கள் 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை' எனக் கூறியிருந்தார்கள். சஹாபாக்கள் எவர்களோடு போர்தொடுத்தார்களோ அந்த ''பனூஹனீபா'' என்பவர்களும் ''லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூல்லாஹ்'' என்று கூறி தொழுது, தங்களை முஸ்லிம்கள் என்றும் கூறியிருந்தார்கள். எவர்களை அலி (ரலி) அவர்கள் உயிருடன் நெருப்பிலிட்டு எரித்தார்களோ அவர்களும் தங்களை முஸ்லிம்கள் என்றுதான் கூறியிருந்தார்கள்.

இந்த அறிவிலிகள் கூறிக்கொள்கிருர்கள்: மரணத்திற்குப்பின் எழுப்பப்படுவதை மறுக்கக்கூடியவன் காபிராகி விடுகின்ருன். அவன் ''லாயிலாஹ இல்லல்லாஹ்'' என்று கூறினுல்கூட அது அவனுக்கு பயனளிக்காது. இவ்வாறே இஸ்லாத்தின் ஏதாவதொருகடமையை மறுப்பவனும் கலிமா சொன்னுலுங்கூட அவன் இஸ்லாத்திற்குப் புறம்பானவஞக ஆகிவிடுகின்ருன் என்று. அப்படியானுல் இஸ்லாத்தின் சிறிய கடமைகளில் ஒன்றை மறுக்கக் கூடியவனுக்கு அவன்

கூறும் கலிமா எவ்வித பலனும் அளிக்காமலிருக்கும் போது, எல்லா ரசூல்மார்களும் கொண்டுவந்த மார்க்கத்தின் அடிப் படையும்' அதன் தலையுமாயிருக்கின்ற தவ்ஹீதிற்கு குந்தகம் விளைவிக்கும் ஷிர்க்கை செய்யக்கூடியவனுக்கு அவன் கூறும் "லாயிலாஹ இல்லல்லாஹ்" எப்படி பயனளிக்கும்?

ஆனால் அல்லாஹ்வின் விரோதிகளான இவர்கள் மேற் கூறப்பட்ட ஹதீஸ்களின் பொருளை அறிவதில்லை.

உஸாமா (ரலி) அவர்களைப் பற்றி அறிவிக்கப்பட்டுள்ள ஹதீஸில், அவர்கள் யாரைக் கொன்றார்களோ அவர் உண்மையாக கலிமா சொல்லவில்லை, மாறாக, தன் உயிர் மீதும், பொருள் மீதும் அஞ்சியே கலிமாவைக் கூறினார் என்று நினைத்துத்தான் அவரை உசாமா (ரலி) அவர்கள் கொலை செய்தார்கள்.

ஆனால் ஒருவன் தன்னை முஸ்லிம் எனக் கூறிவிடுவானா யின், இஸ்லாத்திற்குப் புறம்பான செயல்களை அவன் செய் கின்றான் என்பது தெளிவாகத் தெரியும் வரை அவனை ஒன்றும் செய்யக்கூடாது, இதுபற்றி அல்லாஹ் கீழ்க்காணும் வசனத்தை இறக்கினான்.

> "விசுவாசிகளே! அல்லாஹ்வுடைய பாதையில் (யுத்தத் திற்காக) நீங்கள் சென்றால் யுத்த முனையில் உங்களுக்கு எதிர்படுவோர், விசுவாசிகளா, நிராகரிப்போரா என் பதைத் தெளிவாக அறிந்து கொள்ளுங்கள்" (4 : 94)

இந்த வசனத்தில் விசுவாசிகளா நிராகரிப்போரா என்பதை வேறுபடுத்தி தெளிவாகத் தெரிந்து உறுதிகொள் ளுங்கள் என்று அல்லாஹ் கூறியுள்ளான்.

ஒருவன் தன்னை முஸ்லிம் என்று கூறி இஸ்லாத்தை வெளிப்படுத்தி விட்டபின்னர் அவனை ஒன்றும் செய்யக் கூடாது, மேலும், அவன் உண்மையாகத்தான் இஸ்லாத்தை வெளிப்படுத்தினானா என்பதையும் உறுதியாக அறிய

வேண்டும். இதன் பின்னர் அவன் இஸ்லாத்திற்குப் புறம்பானவற்றை செய்கின்றான் என்று தெரியவருமானால், அவனைக் கொலைசெய்யவேண்டும், என்று இத்திருவசனம் அறிவிக்கிறது.

கலிமா சொன்னவன் எந்த செயலைச் செய்தாலும் அவனைக் கொல்லக்கூடாது என்றிருக்குமானால் இவ்விறைவசனத்திற்குப் பொருளில்லாமலாகிவிடும்.

இவ்வாறே மற்ற ஹதீஸ்களின் பொருள்களும் நாம் கூறியது போன்றேயாகும். அதாவது, ஒருவன் இஸ்லாத்தையும், தவ்ஹீதையும் வெளிபடுத்திவிடுவானாயின் அதற்கு மாற்றமானவை அவனிடமிருந்து நிகழும் வரை அவனை ஒன்றும் செய்யக்கூடாது.

இதற்கு ஆதாரம், உஸாமா (ரலி) அவர்களைப் பார்த்து "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று சொன்னதன் பின்னரா அவரை கொன்றீர் என பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிய ஹதீஸும், மக்கள் "லாயிலாஹ இல்லல்லாஹ்" என்று சொல்லும்வரை அவர்களோடு போராடுமாறு நான் ஏவப்பட்டுள்ளேன் என்ற ஹதீஸுமாகும்.

இந்த ஹதீஸ்களை சொன்ன பெருமானார் (ஸல்) அவர்கள்தான் காரிஜியாக்கள்[1] விஷயத்தில் கீழ்க்காணும் ஹதீஸையும் சொன்னார்கள்.

"நீங்கள் காரிஜிய்யாக்களை எங்கு சந்தித்தாலும் கொன்றுவிடுங்கள். என்னுடைய காலத்தில் அவர்கள் வெளி

---

[1] காரிஜிய்யாக்கள் என்பவர்கள் உதுமான் (ரலி) அவர்கள் ஆட்சி காலத்தில் குழப்பம் ஏற்படுத்தியவர்களாகும். இவர்கள் பல சஹாபாக்களை காபிர்கள் எனக் கூறினார்கள். பல கொள்கைகளில் சுன்னத் ஜமா அத்திற்கு மாறுபட்டவர்களாகும். இவர்கள் இன்றும் சில பகுதிகளில் வாழ்ந்து வருகிறார்கள்.

யாகுவார்களானால், ஆதுக் கூட்டத்தினர்கள் கொல்லப் பட்டது போன்று அவர்களை நான் கொன்றுவிடுவேன்"

இந்த காரிஜிய்யாக்கள் அதிகமான வணக்கங்கள் புரிந்து, திக்று, தஸ்பீஹ்களில் அதிகம் ஈடுபடக் கூடியவர் களாகவும் இருந்தார்கள். சஹாபாக்கள் இவர்கள் முன்னால் தங்களை சிறுமையாகவே கருதுவார்கள். இவர்கள் சஹா பாக்களிடமிருந்து கல்வியும் கற்றார்கள்.

இருப்பினும், இவர்கள் கூறிய கலிமாவும், இவர்கள் வணக்கங்களும், இவர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று கூறிக் கொண்டதும் எவ்வித பயனும் அளிக்கவில்லை. காரணம் இவர்கள் இஸ்லாமிய ஷரீஅத்துச் சட்டத்திற்கு மாறுசெய்த தேயாகும். நாம் முன்னர் குறிப்பிட்டது போன்று நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் யூதர்களோடு போர் தொடுப் பதற்கும், "பனூஹனீபா" என்பவர்களை எதிர்த்து சஹா பாக்கள் போர் செய்ததற்கும் இதுவே காரணமாகும்.

இவ்வாறே பெருமானார் (ஸல்) அவர்கள் "பனூல் முஸ்தலக்" என்பவர்களோடு போர் தொடுக்க காரணமாக இருந்ததும் அவர்கள் ஷரீஅத்திற்கு மாற்றம் செய்ததே யாகும். அதாவது "பனூல் முஸ்தலக்" என்ற குடும்பத்தார் இஸ்லாத்தை தழுவியிருந்தார்கள். இவர்களில் ஒருவன் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வந்து 'பனூல் முஸ்தலக்' என்பவர்கள் சகாத்துக் கொடுக்க மறுக்கின்றார்கள் என்று பொய்யாகச் சொல்லிவிட்டான். (அவன் கூறுவது பொய் என்பது பெருமானார் (ஸல்) அவர்களுக்குத் தெரியாது) எனவே அக்குடும்பத்தார்களோடு போர் தொடுக்க பெருமானார் (ஸல்) அவர்கள் ஆயத்தமானார்கள். உடனே அல்லாஹ் கீழ்க்காணும் வசனத்தை இறக்கினான்.

> "விசுவாசிகளே தீயவன் யாராகிலும் உங்களிடம் ஏதாவதொரு செய்தியைக் கொண்டு வந்தால் (அதன் உண்மையை அறிவதற்காக அதனை) தீர விசாரணை செய்துகொள்ளுங்கள்" (49:6)

நாம் எதை உங்களுக்கு விளக்கினோமோ அதைத்தான்– எதிரிகள் தங்களுக்கு ஆதாரமாக எடுத்துக் கொண்ட ஹதீஸின் மூலம்—பெருமானார் (ஸல்) அவர்கள் விரும்புகிறார்கள் என்பதை அறிய வேண்டும்.

**சந்தேகம் :**

"மறுமை நாளில் மக்கள் எல்லோரும் நபிமார்களான ஆதம், நூஹ், இப்ருஹீம், மூஸா, ஈஸா (அலைஹிம்) இவர்கள் ஒவ்வொருவரிடமும் வந்து அபயம் கோருவார்கள். அப்போது ஒவ்வொருவரும் தங்களுக்குரிய காரணங்களைக் கூறி அவர்களால் இயலாது என்று பின்வாங்கிவிடுவார்கள். இறுதியாக நபிகள் பெருமானார் முஹம்மது (ஸல்) அவர்களிடம் வந்து கேட்பார்கள். அவர்களின் கோரிக்கைக்கு பெருமானார் (ஸல்) அவர்கள் பதிலளித்து அல்லாஹ்விடம் மன்றுடுவார்கள்"

என்ற இந்த ஹதீஸ் அல்லாஹ் அல்லாதவர்களைக் கொண்டு (இஸ்திகாதா) அபயம் தேடுவது 'ஷிர்க்' அல்ல என்பதற்கு ஆதாரமல்லவா?

**பதில் :**

தன் விரோதிகளின் உள்ளங்களில் முத்திரை வைத்து விட்ட அல்லாஹ் மிகத் தூய்மையாகி விட்டான்.

சிருஷ்டிகளால் முடியக்கூடிய விஷயத்தில் அவர்களைக் கொண்டு (இஸ்திகாதா) உதவி தேடுவதை நாங்கள் மறுக்கவில்லை. உதாரணமாக : நபி மூஸா (அலை) அவர்களின் சந்ததிகளில் ஒருவன் மூஸாவிடம் உதவி கோரினான். அதை அல்லாஹ் தன் திருமறையில் கூறும்போது,

> "இரு வாலிபர்கள் சண்டையிட்டுக் கொண்டிருப்பதை மூஸா கண்டார். ஒருவன் அவர் இனத்தைச்சார்ந்தவன். மற்றொருவன் அவருடைய விரோதிகளைச் சார்ந்தவன். விரோதிக்கு எதிராக உதவி செய்யுமாறு அவர் இனத்தைச் சார்ந்தவன் அவரிடத்தில் கோரினான்"
>
> (28:15)

அப்போது மூஸா (அலை) அவர்கள் அவனுக்கு உதவி செய்தார்கள். இதைப்போன்றுதான் யுத்த நேரத்தில் ஒருவருக்கொருவர் உதவி தேடுவதும், மனிதர்களால் செய்ய முடியக்கூடிய உதவிகளாகும். இதைப்போன்ற (இஸ்திகாதா) உதவி தேடல்களை நாங்கள் மறுக்கவில்லை. இபாதத்தின் வகையைச் சார்ந்த "இஸ்திகாதா" உதவி தேடுதலைத்தான் நாங்கள் மறுக்கின்றோம். அதாவது அவுலியாக்களுடைய கப்ருகளில் சென்று அல்லது கண்ணிற்கப்பால் உள்ளவர்களை அழைத்து அல்லாஹ் அல்லாதவர்களால் செய்யமுடியாதவற்றை அவர்களிடம் கேட்பது இவைகளெல்லாம் வெறுக்கப்படவேண்டிய ஷிர்க்கான இஸ்திகாதாவாகும்.

இதிலிருந்து நமக்குத் தெரியவருவது என்னவென்றால், மறுமையில் மக்கள் நபிமார்களைக்கொண்டு தேடும் "இஸ்திகாதா" என்பது சுவர்க்கம் செல்வதற்கு அறுகதையானவர்கள். மஹ்ஷர் மைதானத்திலுள்ள கஷ்டங்களிலிருந்து தங்களுக்கு நிவர்த்தி கிடைப்பதற்காக அவர்களுடைய கேள்வி கணக்குகளைக் கேட்பதற்கு அல்லாஹ்விடம் வேண்டுமாறு நபிமார்களைக் கேட்பதாகும். இவ்வாறு கேட்பது இரு உலகிலும் அனுமதிக்கப்பட்டதாகும்.

உயிரோடுள்ள ஒரு சாலிஹான மனிதனிடம் சென்று, "எனக்காக அல்லாஹ்விடம் துஆ செய்யுங்கள்" என்று அவரை வேண்டுவது ஆகுமானதாகும். எனவே நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் உலகில் ஹயாத்தாக இருக்கும்போது சஹாபாக்கள் அவர்களிடம் சென்று, தங்களுக்காகத் துஆ செய்யுமாறு வேண்டினார்கள். ஆனால் பெருமானார் (ஸல்) அவர்கள் மரணத்திற்குப்பின்னர் அவர்களின் கப்ருகில் நின்று சஹாபாக்கள் இவ்வாறு கேட்கவில்லை. இதைவிட்டும் அவர்கள் தூய்மையானவர்களாகும். கப்ரின் பக்கம் நின்று அல்லாஹ்விடம் கேட்பதையே முன்னோர்கள் வெறுத்திருக்கும்போது கப்ரில் உள்ளவர்களை அழைப்பதை எப்படி அனுமதிப்பார்கள்?

**சந்தேகம் :**

**“நபி இப்ராஹீம் (அலை) அவர்களை நெருப்புக் குண்டத்தில் போட்டபோது ஜிப்ரீல் (அலை) அவர்கள் இப்ராஹீம் (அலை) அவர்களின் முன் தோன்றி அவர்களைப் பார்த்து, ‘உமக்கு ஏதாவது தேவை இருக்கிறதா இப்ராஹீமே!?’ என்று கேட்க, அதற்கு ‘உம்மிடம் எனக்கு எந்தத்தேவையுமில்லை’ என இப்ராஹீம் (அலை) அவர்கள் பதில் கூறினார்கள் என்று இப்ராஹீம் (அலை) அவர்கள் வரலாற்றில் வந்துள்ளது”.**

**படைப்புகளிடம் “இஸ்திகாதா” உதவி தேடுவது ஷிர்க்காக இருக்குமானால் இப்ராஹீம் (அலை) அவர்களிடம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் இவ்வாறு கேட்டிருப்பார்களா?**

**பதில் :**

இதுவும் முன்புள்ள சந்தேகத்தைப் போன்றதுதான். அதாவது ஜிப்ரீல் (அலை) அவர்கள் அல்லாஹ்வின் கட்டளையின் பேரில் தன்னால் இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு செய்துகொடுக்க இயலக்கூடிய விஷயத்தைத்தான் கேட்டார்களே தவிர அவர்களால் முடியாதவற்றைச் செய்து கொடுப்பதாகக் கூறவில்லை.

ஜிப்ரீல் (அலை) அவர்களைப்பற்றிக் கடும் சக்திமிக்கவர் என அல்லாஹ் வர்ணித்துக் கூறியுள்ளான். எனவே, இப்ராஹீம் (அலை) அவர்களைச் சுற்றியுள்ள நெருப்பை எடுத்து, கிழக்கிலும் மேற்கிலுமாக வீசுமாறு அல்லாஹ் ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கு அனுமதி கொடுப்பானாயின் அவ்வாறே அவர்கள் செய்வார்கள். மக்களைவிட்டும் தூரமான ஓர் இடத்திற்கு இப்ராஹீம் (அலை) அவர்களைக் கொண்டுசெல்லுமாறு அல்லது அவர்களை வானத்திற்கு உயர்த்துமாறு ஜிப்ரீல் (அலை) அவர்கள் அனுமதிக்கப்படுவார்களானால் அவ்வாறே அவர்களும் செய்வார்கள்.

ஜிப்ரீல் (அலை) அவர்களை ஒரு செல்வந்தனுக்கு ஒப்பிட்டுக் கூறலாம். அவனிடத்தில் ஏராளமான பணம் இருக்

கிறது. இவன் தேவையுள்ள ஒரு ஏழை மனிதனைப் பார்த்து அவனுக்குத் தேவையானதை கடனாகவும், அவன் தேவையை பூர்த்திசெய்யும் வண்ணம் சிலவற்றை அன்பளிப்பாகவும் தருவதாகக் கூறுகின்றான், ஆனால் அந்த ஏழையோ இவைகளை அவனிடமிருந்து வாங்க மறுக்கின்றான். யாருடைய பிரதியுபகாரத்தையும் எதிர்பார்க்காமல் அல்லாஹ்விடமிருந்து உணவு கிடைக்கும்வரை அவன் பொறுமையாக இருக்கின்றான். இது இப்ராஹீம் (அலை) அவர்களுடைய சம்பவத்திற்கு நல்ல உதாரணமாகும்.

சந்தேகத்தைக் கூறியவர்கள் சிந்தித்தறியும் ஆற்றல் உடையவர்களாக இருப்பார்களானால் மேலே கூறப்பட்ட உதவிதேடலுக்கும் ஷிர்க்கான இபாதத்தின் வகையைச் சார்ந்த இஸ்திகாதாவிற்குமிடையில் உள்ள வேறுபாட்டை நன்கு புரிந்து கொள்வார்கள்.

மிக முக்கியமான சிறந்த ஒரு விஷயத்தைக் கூறி இப்புத்தகத்தை நிறைவு செய்வோம். இவ்விஷயத்தை மேலே கூறப்பட்டவைகளிலிருந்து அறியமுடியும் என்றாலும் அது மிக முக்கியமானதாகையாலும், அதில்தான் அதிகமான தவறுகள் நிகழ்கின்றன என்பதற்காகவுமே இதை தனியாகக் கூறுகின்றோம்.

"தவ்ஹீத்" என்பது கலிமாவை உள்ளத்தால் நம்பி நாவால் மொழிந்து அதன் அடிப்படையில் செயல்படுவதாகும். இதில் ஏதாவதொன்றில் குறை ஏற்படுத்தக் கூடியவன் முஸ்லிமாகக் கருதப்படமாட்டான். "தவ்ஹீத்" இதுதான் எனத் தெரிந்த பின்னரும் அதன்படி செயல்படவில்லையானால் அவன் காபிராக, மனமுரண்டு பிடித்தவனாக ஆகிவிடுகின்றான் என்ற விஷயத்தில் கருத்து வேறுபாடில்லை.

இந்த தவ்ஹீத் விஷயத்தில் அதிகமானவர்கள் தவறிவிடுகிறார்கள். தவ்ஹீத் உண்மைதான், அதை நாங்கள் அறிந்துதான் இருக்கின்றோம். அது உண்மை என்று சான்று

பகருகின்றோம். ஆனால் அதன்படி எங்களால் செய்ய முடிவதில்லை. அதன்படி செயல்படுவதற்கு எங்கள் ஊர்க்காரர்கள் அனுமதிக்க மாட்டார்கள், என்ற இது போன்ற காரணங்களைக் கூறுகின்றனர். ஆனால் குப்ரின் தலைவர்களும் உண்மை இதுதான் என அறிந்திருந்தும் ஏதோ சில காரணங்கள் கூறியே அதைப்பின்பற்ற மறுத்தார்கள் என்பதை இவர்கள் அறிவதில்லை. அல்லாஹ் கூறுகிறான் :

> "அவர்கள் அல்லாஹ்வுடைய வசனங்களை சொற்ப ஆதாயங்களுக்கு விற்றுவிட்டார்கள்" (9:9)

எனவே உண்மையைப் பின்பற்ற தயங்குகின்றனர்.

மேலும் அல்லாஹ் கூறுகின்றான் :

> "அவர்கள் தங்கள் குழந்தைகளை (சந்தேகமற) அறிவதைப் போல் உண்மை இதுதான் என நன்கறிவார்கள்" (6:20)

தவ்ஹீத் என்றால் என்ன என்று அறியாமலும் அதை உள்ளத்தால் நம்பாமலும் வெளிப் படையாக மட்டும் செயல்படக் கூடியவன் 'முனாபிக்' நயவஞ்சகனாவான். இவன் சுத்த காபிரை விட மோசமானவனாகும்.

> "நிச்சயமாக நயவஞ்சகர்கள் நரகத்தின் கீழ் பாகத்தில் தான் இருப்பார்கள்" (4:145)

என அல்லாஹ் கூறுகின்றான்.

நயவஞ்சகம் என்பது பெரிய விஷயமாகும். மக்கள் நாவுகளிலிருந்து வெளியாகும் பேச்சுக்களை சிந்தித்துப் பார்ப்பவர்களுக்கு அது புலனாகும்.

சிலர் உண்மை இதுதான் என அறிந்தும், அதன்படி அமல் செய்யும்போது உலகாதாயங்கள் குன்றிவிடும், மக்கள்

மத்தியில் மதிப்பிழக்க நேரிடும். பிறரின் பழிச்சொல்லிற்கு இரையாகவேண்டும் என்ற பயத்தின் காரணத்தினால் உண்மையின்படி செயல்படத் தவறிவிடுகின்றார்கள். சிலர் உண்மையை அறிந்து வெளிப்படையாக மட்டும் செயல் படுகிறார்கள்.

ஆனால் குர்ஆனிலிருந்து முன்னர் கூறப்பட்ட இரு வசனங்களை சிறிது சிந்தித்தாராய்வது அவசியமாகும்.

முதலாவது வசனம் :

"நீங்கள் (செய்யும் விஷமத்தனமான பரிகாசத்திற்கு வீண்) புகல் கூற வேண்டாம். நீங்கள் விசுவாசம் கொண்டதற்குப் பின்னர் நிச்சயமாக காபிர்களாகி விட்டீர்கள்" (9:66)

ரோம் தேசத்தவர்களை எதிர்த்துப் பெருமானார் (ஸல்) அவர்களுடன் போர் செய்த சில சஹாபாக்கள் குப்ருடைய வார்த்தையை பரிகாசமாகவும், விளையாட்டாகவும்கூறியதன் காரணத்தால் காபிராகிவிட்டார்கள் என அல்லாஹ் கூறுகிறான். இதை நாம் அறியும்போது, உலகாதாயம் குறைந்துவிடும், மக்களிடம் மதிப்பிழக்க நேரிடும், பிறர் பழிச் சொல்லிற்கு ஆளாகவேண்டும் என்பதை அஞ்சியவனாக, குப்ரானவற்றைப் பேசி அதன்படி செயல்படக் கூடியவன், தமாஷாக குப்ருடைய வார்த்தையைக் கூறியவனைவிட மிக மோசமானவனாகும் என்பது தெரியவருகிறது.

இரண்டாவது வசனம் :

"எவனேனும் விசுவாசங்கொண்டதன் பின்னர் அல்லாஹ்வை (நிராகரித்தால் அவனுக்கு தக்க வேதனை கொடுக்கப்படும்) அவனுடைய இருதயம் விசுவாசம் கொண்டு முற்றிலும் திருப்தியடைந்திருக்கும் நிலையில், பிறருடைய நிர்ப்பந்தத்தின் மீது நிராகரிப்பானாயின் (அவன் மீது யாதொரு குற்றமுமில்லை) எனினும், எவ

ரேனும் தங்கள் இருதயங்களில் நிராகரிப்பு நிறைந்திருந்து (இவ்வாறு செய்தால்) அவர்கள்மீது அல்லாஹ்வுடைய கோபம்தான் ஏற்படும் அவர்களுக்கு மகத்தான வேதனையுமுண்டு ஏனென்றால் நிச்சயமாக இவர்கள் மறுமையைவிட இவ்வுலக வாழ்க்கையையே நேசித்துகொண்டார்கள், நிச்சயமாக நிராகரிக்கும் இத்தகைய மக்களை அல்லாஹ் நேரான வழியில் செலுத்த மாட்டான்'' (16 : 106)

இவ்வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவர்களின் காரணங்களை அல்லாஹ் ஏற்றுக்கொள்ளவில்லை ஈமானால் அமைதி பெற்ற உள்ளமுடையவர்களாக இருந்து வற்புறுத்தப்பட்டதின் காரணத்தினால் குப்றை மொழிந்தவர்கள் மட்டும் இதிலிருந்து விதிவிலக்காகிறார்கள் இவர்களல்லாத மற்றவர்கள் ஈமான்கொண்டதின் பின்னர் காபிராகிவிட்டார்கள். இவர்கள் குப்ரின் செயல்களை பயத்தின் காரணத்தாலோ, நாடு, குடும்பம், பணம் முதலியவற்றின் மீதுள்ள அன்பின் காரணத்தாலோ, அல்லது தமாஷாகவோ எந்த காரணத்திற்காகச் செய்தாலும் அவர்கள் இஸ்லாத்தைவிட்டு வெளியேறி விடுகிறார்கள், என்பதை மேற்கூறப்பட்ட இறை வசனம் விளக்குகிறது.

இருவிதமாக இவ்வசனம் இதை நமக்கு விளக்குகிறது. ஒன்று: ''வற்புறுத்தலின் காரணத்தால் குப்ரை செய்தவர்களைத் தவிர'' என்ற அல்லாஹ்வின் சொல் வற்புறுத்தப்பட்டவர்களை மாத்திரம் தான் நீக்கித்தள்ளுகிறதே தவிர வேறு யாரையும் நீக்கித்தள்ளவில்லை. மனிதன் சொல், செயலின் மீதுதான் வற்புறுத்தப் படுவானேயல்லாமல் உள்ளத்திலுள்ள கொள்கையை யாராலும் வற்புறுத்த முடியாது.

இரண்டு: ஏனெனில் நிச்சயமாக இவர்கள் மறுமையைவிட இவ்வுலகவாழ்க்கையை நேசித்துக் கொண்டார்கள்.

என்ற அல்லாஹ்வின் சொல்லாகும்.

குப்ரும், அதனுடைய தண்டனையும் கொள்கை அறியாமையின் காரணத்தினாலோ, மார்க்கத்தின் மீது கோபமும், குப்ரின் மீதுள்ள ஆசையின் காரணத்தினாலோ, அல்ல. மாறாக உலக ஆசாபாசத்தை மார்க்கத்தைவிட மேலாகக் கருதியதன் காரணத்தினால்தான் அல்லாஹ் அவர்களை காபிர்களென்று கூறி அதற்காக தண்டனையும் கொடுத்தான்.[1]

அல்லாஹ் மிக அறிந்தவனாகவும், மிக கண்ணியமுடைய வனாகவும், மிக சங்கைக்குரியவனாகவுமிருக்கின்றான். அல்லாஹ்வின் ஸலவாத்தும், சலாமும் நமது நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்கள் குடும்பத்தினர் தோழர்கள் மீதும் உண்டாவதாக.

ஆமீன்.

---

[1] இன்று நமது சமூகத்தில் பெரும்பாலானவர்கள், குறிப்பாக அறிவாளிகள் என தன்னைப் பற்றி பிதற்றிக் கொள்ளக்கூடியவர்கள், தாங்கள் செய்துவரும் செயல்கள் தவறு என நன்கு தெரிந்தும்கூட உலகாதாயத்தை சம்பாதிக்க வேண்டுமென்பதற் காகவும், தனது வயிறே முக்கியம் எனக் கருதியதனு லும் அத்தவறுகளை துணிகரமாகச் செய்து வருகிறார் கள். அல்லாஹ் எல்லோருக்கும் நேர்வழி காட்டப் போதுமானவன்.

اللغة التاميلية



إدارة أوقاف

صالح بن عبدالعزيز الراجحي

# كشف الشبهات

## باللغة التاميلية

تأليف:

الشيخ: محمد بن عبد الوهاب

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في شمال الرياض


طبع على نفقة إدارة أوقاف

صالح بن عبدالعزيز الراجحي

غفر الله له ولوالديه ولذريته ولجميع المسلمين

www.rajhiawqaf.org


يهدى ولا يباع